



சமய பாட போதனைத் திங்களிதழ்

திருவள்ளுவர் ஆண்டு 2006

ஆவணித் திங்கள், 1975 ஆகஸ்ட்





ACC-NO- 38032


உம்பர்தருத் தேனுமணிக் கசிவாகி
ஒண்கடலிற் றேனமுதத் துணர்வூறி
இன்பரசத் தேபருகிப் பலகாலும்
என்றனுயிர்க் காதரவுற் றருள்வாயே
தம்பிதனக் காகவனத் தணைவோனே
தந்தைவலத் தாலருள்கைக் கனியோனே
அன்பர்தமக் கானநிலைப் பொருளோனே
ஐந்துகரத் தானைமுகப் பெருமானே

--அருணகிரிநாதர்


# தமிழ்நாடு தெய்விகப் பேரவை

9, மகாராஜா சூரியராவ் சாலை

சென்னை-600018,

உ

# அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி

## திருக்கோயில், பழனி

பழனி ஞானதண்டாயுதபாணியைப் பணிந்திட வாரீர்!
அழகான திருமுருகன் அருள் பெறவே திரண்டு வாரீர்!
செந்தேனும் பாலும் மணக்கும் சேயோனை வழிபட வாரீர்!
சந்தன விபூதி மணக்கும் திருமேனி கண்டு மகிழ வாரீர்!

முடிக்காணிக்கை தரத் தனியிடம்!
தங்குவதற்கேற்ற வசதிகள்!
முதியவரும் முடியாதோரும் முருகன் அருகே செல்ல
இழுவை ரயில் வசதி!
பொங்கியெழும் பேரழகனைத் தாங்கிவரும் தங்கரதம்
காண வசதிகள்!

அத்தனையும் செய்து அழைக்கிறது பழனித் திருக்கோயில். தமிழ்க்கடவுளாம் கந்தப்பெருமானின் அருள்பெற்று, அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் கண்காணிப்பில் கீழே கண்ட நிறுவனங்கள் நிர்வகிக்கப்படுகின்றன.

1. அருள்மிகு பழனியாண்டவர் கலைக்கல்லூரி
2. அருள்மிகு பழனியாண்டவர் இந்தியப் பண்பாட்டுக் கல்லூரி
3. அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக்கல்லூரி
4. அருள்மிகு பழனியாண்டவர் செந்தமிழ்க் கல்லூரி
5. கார்த்திக்பள்ளி (ஆங்கிலப்போதனை)
6. செவிடர்பள்ளி
7. நாதசுரக் கல்லூரி
8. வேத ஆகமப்பாடசாலை
9. அன்புஇல்லம் (அனாதை விடுதி)
10. முதியோர் இல்லம்
11. குழந்தைகள் காப்பகம்
12. மருத்துவமனை

பழனித் திருமலையில் நாளும் பெருகிவரும் பக்தர்கட்குப் போதிய வசதிகள் செய்து தருவதற்காக 60 லட்சரூபாய் செலவில் மாபெரும் திருப்பணித் திட்டம் செயல்பட உள்ளது.

ஆர் அர்ச்சுனன், பி.ஏ.,
துணை ஆணையர்-நிர்வாக அதிகாரி

30




சமய பாட போதனைத்
திங்களிதழ்

இராக்கத ஆவணி
1975 ஆகஸ்டு

மணி 4] [ஓசை 2

பதிப்பாசிரியர் குழு :

தவத்திரு குன்றக்குடி அடிகளார்
சீலத்திரு ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்
மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர்
டாக்டர் வை. இரத்தினசபாபதி
பேராசிரியர் கா. அ. மணவாளன்
டாக்டர் சொ. சிங்காரவேலன்
டி. என். சுகி. சுப்பிரமணியன்
குழந்தைகள் உலகம்
ஏ. ஜி. சுப்பிரமணியம்
சிலம்பொலி சு. செல்லப்பன்
திருமதி இராஜேஸ்வரி நடராசன்
க. கலியாணம்

## இந்த இதழில்



## அருளோசை அன்பர்களுக்கு வணக்கம்

இம்மாத இதழில் தவத்திரு. அடிகளார் அவர்களின் ''திருக்குறள் தேசீய நூல்'' என்ற தொடர் கட்டுரை ஆரம்பமாகின்றது. மற்றும் 'பெரியோர் பேட்டி' என்ற தொடரில் சீலத்திரு. ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களைப் பேட்டி கண்ட கட்டுரையும் இடம் பெற்றுள்ளது. அப்பேட்டியின்போது சுவாமிகள் அருளியுள்ள மறுபிறப்புபற்றிய கருத்துரை அன்பர்களின் சிந்தனைக்கு விருந்தாக அமைந்துள்ளது. எழுத்துப் பட்டி மன்றப் பகுதிக்கு ஏராளமான சூடும் சுவையும் நிறைந்த கட்டுரைகள் வந்துள்ளன. அப்பகுதியில் தெரிவித்துள்ள அன்பர்களின் கருத்துக்கள் தொடர்ந்து வெளியிடப்படும்.

''தோத்திரப்பா விளக்கம்'' என்னும் பகுதியில் சைவ, வைணவ துதிப்பாடல்களின் தத்துவ விளக்கங்கள் தொடர்ந்து இடம் பெறும்.

அடுத்து வரும் இதழ்களில் 'சமயத் தொடர்பான ஐயந்தெளிதல்' என்ற பகுதியும், சமய–சாத்திர–தோத்திர நூல்களுக்கான மதிப்புரைப் பகுதி ஒன்றும் ஆரம்பமாக உள்ளன. அப்பகுதிகளில் தக்க அறிஞர்கள் விளக்கங்கள் கொடுத்தும், விமரிசனங்கள் செய்தும் பயன் தருவார்கள். மதிப்புரைக்கு நூல் அனுப்புவோர் இரண்டு பிரதிகள் அனுப்ப வேண்டும்.

விநாயகர் சதுர்த்தி 9–9–75 அன்று வருவதால், இவ்விதழில் 'விநாயகர்' திருவுருவம் அட்டைப் படமாக வெளியிடப்பட்டுள்ளது. பேரவையின் அடக்கவிலைப் பதிப்பான விநாயகர் அகவல் என்ற நூலை, அன்பர்கள் வாங்கி ஓதி இன்புறுமாறு கேட்டுக் கொள்கின்றோம்.

பொ. ரெ. கோவிந்தராஜலு

பதிப்பாசிரியர்









# நமது தலைவர்






வெண்ணீறும் சந்தனமும் துலங்கும் நெற்றி ;
விரைவாக நமையிழுக்கும் காந்தப் பார்வை ;
பண்போடு பசுந்தமிழைக் குழைத் தெடுத்துப்
பாமரரும் பாங்காக உணரும் வண்ணம்
விண்சேர்ந்த மேகம்போல் பேத மின்றி
விளக்கவுரை மழைபொழியும் வேந்தர் செவ்வாய் !
கண்ணாடி போலுள்ளம் திறந்து காட்டும்
கருத்துடையார் நம்தலைவர் " அடிகளாரே !"





முப்பொழுதும் திருத்தொண்டில் முயற்சி! கூறும்
முத்தமிழில் முனிவர்தவ முதிர்ச்சி! காணும்
எப்பொழுதும் ஓயாத உணர்ச்சி வேகம்!
எவரிடத்தும் மாருத மலர்ச்சி! அந்த
அப்பரது பெருநெறியில் கவர்ச்சி கொண்டே
ஆர்வமுடன் செயலாக்கும் மகிழ்ச்சி! இங்கே
செப்புகின்ற சிறப்பெல்லாம் பெருக்கிக் கூட்டிச்
சேர்த்தமைத்த மொத்தஉரு "அடிக ளாரே!"

செந்தமிழின் திருமுறையில் தோய்ந்து தோய்ந்து
செந்தேனைக் குடிக்கின்ற "தேனீ!" நல்ல
சிந்தையுடன் "எறும்பெ"னவே சிறுகக் கூட்டிச்
சேர்த்திருக்கும் இளைஞர்படை! சேம வைப்பு!
அந்தமிழில் ஆற்றொழுக்காய்ச் சிதறல் இன்றி
அவரெழுதும் நடைகண்டே "அன்னம்" நாணும்;
இந்தநிலம் வட்டமிடும் "வானம் பாடி!"
இவையெல்லாம் நம்தலைவர் "அடிகளாரே!"

புனிதமுடன் பாய்வதிலே "கங்கை!" வேகப்
புரட்சியிலே பொங்கிவரும் "யமுனை!" பேச்சால்
மனிதர்களைக் கூட்டுவதில் "சிந்து!" நாட்டின்
மக்கள்நலம் பேணுவதில் "பொன்னி!" சொல்லின்
இனிமைதனக் குவமை "சிறு வாணி!" சேர்ந்த
இடமெல்லாம் எழிலூட்டும் "வைகை!" கொட்டும்
கனிவினிலே "குற்றால அருவி!" எல்லாம்
கலக்கின்ற "கடல்" நம்மின் "அடிக ளாரே!"



உலகெல்லாம் சுற்றுவதில் "முருகன்!" நல்ல
உவமைகளைப் படைப்பதிலே "பிரமன்!" இன்பம்
நிலவுதமிழ்க் காப்பதிலே "திருமால்!" துன்பம்
நீக்குவதில் "யானைமுகப் பிள்ளை!" தெய்வப்
பலமெல்லாம் பகிர்ந்தளித்துப் படைத் தழித்துப்
பக்குவமாய் மறைப்பதிலே அருளைக்கூட்டி
நலமெல்லாம் தருவதிலே "சிவனே!" நம்மின்
நல்ல "அருள் நெறித்தந்தை அடிக ளாரே!"

இயற்றியவர்:




(30-7-75 அன்று திருபுவனத்தில் நடைபெற்ற பேரவை மாநிலக் குழுக் கூட்டத்தில், திருவருள்திரு குன்றக்குடி மகாசந்நிதானம் அவர்கள் பேரவைத் தலைவராக மீண்டும் ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப்பெற்றதை யொட்டி வெளியிடப் பெறுகிறது.)

# ‘ கிறித்தவ ஹரிசனங்களுக்குச் சலுகை ’......முடிவு என்ன ?



தமிழ்நாடு அரசு, “கிறித்தவ ஹரிசனங்களுக்கும் ஹரிசனங்களுக்குரிய சலுகையை வழங்க முன் வந்திருக்கிறது” என்ற செய்தி நமக்குமேலும் குழப்பத்தை உண்டாக்குகிறது. “கிறித்தவ ஹரிசன்” என்று சொல்லும் பொழுதே அது புதிதாக உண்டாக்கப்படுகிற ஒருசாதி என்பது புரிகிறது. ஹரிசன் என்று சொன்னல் சந்தர்ப்ப சூழ்நிலைகளின் காரணமாக அல்லது தவருன கொள்கையின் காரணமாகப் பல நூறு ஆண்டுகளாகத் தாழ்த்தப் பட்டவர்களாக, தீண்டத்தகாதவர்களாக ஒதுக்கப்பட்டிருந்த இந்து சமூகத்தின் ஒரு பிரிவினரையே குறிக்கும். அவர்களே ஹரிசன்கள் என்பது நமது அரசியல் சட்டம் மூலம் நாம் அறிந்துள்ள உண்மை. இத்தகையோருடைய பரிதாபகரமான நிலையை மாற்றி முன்னேற்றமடையச் செய்யத்தான் “ஹரிசன நலத்திட்டம்” உருவாக்கப்பெற்றது. இக் கொள்கையை நமது நாடாளுமன்றச் சட்டங்கள் தெளிவாக்குகின்றன. அது மட்டுமன்று, தீண்டாமையைக் காரணமாகவும், முன்னேற்றத்தைக் குறிக்கோளாகவும் கொண்டு நமது சமூகத்திலிருந்து மதம் மாறியவர்களே கிறித்தவர்கள். அங்கு சாதி முறை இல்லை. “கிறித்தவ ஹரிசன்” என்ற ஒரு சாதி முறையை “சர்ச்” ஒத்துக் கொள்கிறதா? கிறித்தவ சமூகத்தின் நடைமுறையா? அல்லது தமிழ்நாடு அரசின் படைப்பா? ஹரிசன நலத்திட்டத்தைக் கண்ட தலைவர்கள் ஹரிசன முன்னேற்றத்தைக் கருதியும் இந்து சமூகத்தில் நிலவும் தீண்டாமையை விலக்கவும், அறிவுக் கொவ்வாத-தேவையில்லாத மத மார்ச்சரியங்களுக்குக் காரணமான மத மாற்றங்களைத் தடைசெய்யவும்தான் ஹரிசனநலத் துறையைக் கண்டு செயல்முறைப்படுத்த முன் வந்தனர். இன்றைய தமிழ்நாடு அரசின் அறிவிப்பு, இந்த அடிப்படைக் கொள்கைகளுக்கு முரணாக அமைந்திருக்கிறது. இது மதமாற்றத்தை ஊக்குவிக்கும் என்பதைத் தமிழ்நாடு அரசின் கவனத்திற்குக் கொண்டு வருகின்றோம். அதுமட்டுமன்று. ஹரிசனங்களின் நிலைமையையும் கிறித்தவ சமூகத்தின் நிலைமையையும் ஒப்பிட்டால் கிறித்தவ சமூகம் ஒரு வளர்ந்த சமூகம். கல்வித் துறையிலும் சரி, உத்தியோகத் துறையிலும் சரி, அவர்களுடைய மக்கள் தொகையை நோக்க அவர்களுடைய வளர்ச்சி அதிக விழுக்காட்டையே காட்டும். இந்துசமூகம் அப்படியல்ல. அதிலும் ஹரிசன சமூகத்தின் நிலை மிகுந்த பரிதாபத்துக்குரியது. வளர்ந்த சமூகத்தோடு ஒரு குறிப்பிட்ட நிதியைப் பங்கிட்டுக் கொள்ளும் படி ஹரிசன சமூகத்தை ஈடுபடுத்துவது, ஹரிசன சமூகத்தை மேலும் பலஹீனப் படுத்தும். நிதி மூலாதாரத்தை அவர்களே பயன்படுத்திக் கொள்வர். அது அவர்களுக்குரிய இன்றைய வாய்ப்பு. அதனல் ஹரிசன சமூகத்தினுடைய துன்பங்கள் மேலும் மிகுதியாகும். ஹரிசன சமூகத்தின் முன்னேற்றம் தடைப்படும். ஹரிசன சமூகத்தின் நலனுக்குரிய அந்தத் துறை நிதியை கிறித்தவ ஹரிசனங்களுக்கு விஸ்தரிக்காமல், கிறித்தவ ஹரிசனங்களின் முன்னேற்றத்துக்கு வேறு மாற்று ஏற்பாடு செய்வதுதான் நல்லது. அரசு மேற்கொள்ளும் நல்ல திட்டங்கள் சமூகத்தின் பலஹீனங்களை மேலும் வளர்க்கப் பயன்படுவனவாக அமைந்து விடக்கூடாது என்பதே நமது கவலை.

நாகர்கோயிலில் 11-5-75ஆம் நாள் நடைபெற்ற தமிழ்நாடு தெய்விகப் பேரவை மாநில மாநாடு,“அரசு வழங்கும் சலுகைகள் சாதிகள்-மதங்கள் பேரால் வழங்காமல் கல்வித்துறையில்-பொருளாதாரத் துறையில்-சமூகத்துறையில் பின்தங்கியவர்கள் என்ற அடிப்படையில் வழங்கவேண்டும்” என்று கேட்டுக் கொண்டு தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது. அங்ஙனம் செய்தாலும் சலுகைகளுக்காகச் சாதிகள் வளராது. சலுகைகளின் பேரில் மாற்றங்கள் நிகழாது. ஏழையாய் இருப்பவர் யாராயினும் அவர்களுக்கு அரசின் சலுகைகள் கிடைக்கும். சாதி வேற்றுமைகளை ஒழித்த பெருமையும் கிடைக்கும். தமிழ்நாடு அரசு இத்துறையில் ஆவன செய்ய வேண்டும் என்பது நமது வேண்டுகோள்.

—தவத்திரு குன்றக்குடி அடிகளார்




திருவளர் செல்வனுக்கு,

நல்வாழ்த்துக்கள் !

முக்குணங்களைப் பற்றி உனக்கு இப்பொழுது எழுத வேண்டும். எல்லாவற்றிலும் வேறுபட்ட கருத்து இருப்பது போலவே, முக்குணங்களைப் பற்றியும் சமயத்துறையினர் தம்முள் மாறுபடுகின்றனர். பொதுவாகக் குணம் என்ற சொல்லுக்கு இதுவரை நீ அறிந்திருக்கிற பொருள் 'இயல்பு' அல்லது 'தன்மை' என்பதேயாம். அதுதான் நமது மரபில் வளர்ந்து வந்துள்ள கருத்தும்கூட, ஆனல், சாங்கியர் குணத்திற்குப் "பொருள்கள்" என்று பொருள் கொள்கின்றனர். சத்துவகுணம் இலேசான தன்மை. மேல் நோக்கி எழும் இயல்பு; பிரதிபிம்பத்தைக் காட்டும் கண்ணடி ஆகியவற்றைச் "சத்துவம்" என்கின்றனர். ஆனல், "சத்துவம்" என்பதற்கு நமது கருத்து "தன்மை" என்பதேயாகும். சத்துவகுணம் மிகவுயர்ந்தது; ஒளிமயமானது; ஞான அறிவொளி! சத்துவ குணமுடையவர்கள் துன்பங்கள்-துயரங்களை முன்னேற்றத்திற்குப் பயன் படுத்திக் கொள்வார்கள். அவர்களைத் துன்பம் அழிப்பதில்லை. நிலத்திற்குக் கொத்துதல்,-வெட்டுதல் ஆகிய துன்பங்கள், அழிவைத் தருவதில்லை. மாருக நிலம் தன்னை வளர்த்துக்கொண்டு மற்றவர்களுக்குப் பயன்படுகிறது. அவ்வழி, மதிப்பை உயர்த்திக் கொள்கிறது. அதுபோலச் சத்துவ குணமுடையவர்கள் துன்பங்களால் அழியாமல் தம்மைத் தூய்மை செய்துகொண்டு அறநெறிகளை வாழ்விப்பர்; வளர்ப்பர். சத்துவகுணம் மிக்குடையவர்கள் திருவருட் சிந்தனையில் ஈடுபடுவார்கள். அவர்களுடைய ஆன்மா, ஞானத்தின் ஒளியினைப் பெற்று நுண்ணறிவினைத் தருகிறது. எல்லையற்ற இன்பத்தினைத் தருகிறது. அதனுல், சத்துவ குணமுடைய ஐம்பொறிகள் மெய்யறிவுடையனவாக, எழிலுடையனவாக இன்பத்தின் ஊற்றுக்களன்களாக விளங்குகின்றன. இதனை ஆரூரர், தில்லையில் திருக்கூத்தை வணங்கிய காட்சியை விளக்குவதன்மூலம் சேக்கிழார் நமக்கு விளக்குகிருர்.

"ஐந்துபே ரறிவும் கண்களே கொள்ள
அளப்பரும் கரணங்கள் நான்கும்
சிந்தையே ஆகக் குணமொரு மூன்றும்
திருந்துசாத்துவிகமே ஆக
இந்துவாழ் சடையான் ஆடுமானந்த
எல்லையில் தனிப்பெருங்கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார்"

என்பது சேக்கிழார் பாடல்.

"சத்துவ"த்திற்கு அடுத்த குணம், "இராஜசம்" என்பது. சாங்கியர் கொள்கைப்படி "இராஜசம்" பொருள் மட்டுமல்ல. இயங்குவதும்கூட! சத்துவம், தாமசம் ஆகிய இரண்டு குணங்களை இயக்குவதும்கூட இராஜசமேயாம்! காற்று வீசுகிறது; தீ, பரவுகிறது; நமது புலன்கள் பொருள்கள்மேல் செல்லுகின்றன. இவையெல்லாம் இராஜசத்தின் இயல்பு. நம்முடைய துக்கத்திற்குக் காரணமும், இராஜசமேயாம். நம்முடைய மரபில் சத்துவத்திற்கு அடுத்தகுணம் இராஜசமாகும். இராஜஸ் என்பதை இரஜோகுணம் என்றும் வழங்குவர். உலகியலுக்குச் சில நியதிகளுண்டு. பிறர் பொருளை அபகரிப்பது நியாயமற்ற பேராசை; பொறிகளை உலகியல் நிகழ்வுகளில் அதிகமாக ஈடுபடுத்துதல்; முனைந்து தொழிற்படுத்துதல்; அவற்றால் புதிய புதிய செயல்களைத் தொடங்குவதில் ஊக்கம் உண்டாகிறது. அங்ஙனம் தொடங்கிச் செய்யும் பணிகளில் வெற்றி கிடைத்தால் மகிழ்ச்சி ஏற்படுகிறது. தோல்வி கிடைத்தால் மனச் சோர்வு உண்டாகிறது. அவ்வழி அமைதியின்மையும் தலைகாட்டுகிறது. தோல்வி கண்ட பணிகளை மேலும் செப்பமாகச் செய்யும் ஆர்வம் தலையெடுக்கிறது. அவ்வழி மேலும் செயல்வேட்கை. இங்ஙனம் ஓயாது தொழிற்படுதலும், வெற்றி-தோல்விகளில் மகிழ்தலும், மனந்தளர்தலும் இரஜோ குணத்தின் விளைவுகள். இத்தகைய குணமுடையோரால்தான் இன்றைய உலகியல் பெரும்பாலும் நடைபெறுகிறது. சத்துவ குணமுடையோர் எங்கிருக்கிறார் எனத் தேடிக் காண வேண்டியிருக்கிறது.

அடுத்த மூன்றாவது குணம் தாமசம். தமோகுணம் என்றும் கூறுவர். பெயரளவிலேயே உனக்கு விளக்கம் கிடைக்கவில்லையா? சத்துவம், இராஜசம்–இரண்டுக்கும் நேர் முரணானது தாமசம். தாமசம் இயக்கத்தைத் தடுக்கும்; அயர்ச்சியைத் தரும்; மயக்கத்தைக் கொடுக்கும். தாமச குணத்திற்குச் சாங்கியர் கூறும் விளக்கத்திற்கும், நமது கருத்துக்கும் நிறைந்த வேறுபாடு இல்லை. தாமசகுணம் இருள் தன்மையது. மனத்தை அது இருளில் ஆழ்த்தும்; அறிவாற்றலைக் குறைக்கும்; செயலாற்றலைத் தடுக்கும்; சோம்பலைத் தரும்; காலத்தின் அருமையை அறியவொட்டாது; எதையும் ஒத்திப்போடும்; தூக்கத்தில் சுகம் காட்டும்; பாதுகாப்புணர்ச்சியை உருக்குலைக்கும். எதிரதாக் காக்கும் இயல்பு இதற்கில்லை. தவறுகளையே செய்யப் பழக்கும். நன்மையைத் தீமையாகவும், தீமையை நன்மையாகவும் நண்பனைப் பகைவனாகவும், பகைவனை நண்பனாகவும் கருதத் தூண்டும். தமோ குணமுடையவர் வாழ்க்கை பரிதாபகரமானது.

சாங்கியர் கொள்கைப்படி இந்த மூன்று குணங்களும் தம்முள் முரண்பட்டன. நமக்கும் அவை தம்முள் முரண்பாடுடையன என்பதில் கருத்து வேறுபாடு இல்லை. "முரண்பட்ட இம்மூவகைக் குணங்களிடையே ஓயாத போர்! அதே பொழுது மூன்றும் ஒத்தும் இயங்கும். ஒரு குணம் மற்ற குணங்களின் துணையின்றி எதையும் செய்ய இயலாது. எப்போதும் மூன்றும் சேர்ந்தே இருக்கும்" என்பது சாங்கியர் கருத்து.

திருவளர் செல்வ, இங்கே நாம் சாங்கியர் கொள்கையோடு மாறுபடுகின்றோம். என்ன மாறுபாடு? இம்மூவகைக் குணங்களும் சேர்ந்தே இருக்கும் என்பது உடன்பாடிலாதது. இம்மூவகைக் குணமும் சேர்ந்தேயிருந்தால் உயிருக்கு ஏது

வளர்ச்சி? ஏது உயர்வு? இம்மூவகைக் குணங்களும் ஒருவனிடத்தில் இருக்கலாம். தமோ குணத்தை இராஜச குணம் அடக்கி, இராஜச குணத்தைச் சத்துவ குணம் வென்று விளங்க வேண்டும் என்பதே கருத்து. சாங்கியர் முக்குணங்களும் சேர்ந்து பொருள்களை உண்டு பண்ணுகின்றன என்று கூறுகின்றனர். இதுவும் நடைமுறைக்கு ஒவ்வாதது. மூன்று குணங்களும் சேர்ந்து தொழிற்படுவதென்பது இயல்வதொன்றன்று. குணங்கள் தன்மைகளே! பொருள்களின் தோற்றத்திற்கு அல்லது படைப்பிற்குக் குணங்களும் காரணமாக இருக்கலாமே தவிர, அவைகளே உண்டுபண்ணத்தக்கன அல்ல. உலகின் ஒடுக்கத்தில் மூன்று குணங்களும் ஒப்ப நிற்கும் என்றும் சாங்கியர் கூறுகின்றனர். அதுவும் அறிவுக்குப் பொருத்தமாக இல்லை. இம்மூவகைக் குணங்களையும் கடந்த நிலையே உலகின் ஒடுக்கம். சத்துவம்கூட ஒடுக்கத்திற்கு அடங்கியதுதான்! சாங்கியர் பார்வையில் உலக ஒடுக்கம் மூன்று குணங்களும் ஒப்பச் சமநிலையில் நின்றது என்றால் திரும்பவும் ஏன் உலகம் உண்டாயிற்று? சமநிலைக்கு ஏற்பட்ட குறை என்ன? சமநிலைக்கேட்டினால் உலகம் தோன்றுவதும் ஒடுங்குவதும் எதற்காக? இவைகளுக்குச் சாங்கியர் கூறும் விடை என்ன? மேலும், குணங்கள் உயிர்களைப் பிணைக்கின்றன என்றும் கூறுகின்றனர். குணங்கள் உயிர்களைப் பிணைக்கவும் செய்கின்றன. அக்குணங்களே விடுவிக்கவும் செய்கின்றன. ஆதலால், அதுவும் பொருந்தாது. குணங்கள் மூன்று ஆவதற்கும் பல வகைப்பட்ட பொருள்களின் தோற்றத்திற்கே என்ற காரணமும் ஏற்புடையதாக இல்லை. திருவளர் செல்வ, சாங்கியர் கொள்கைப்படி இவ்வுலகத் தோற்றத்திற்கு மூலகாரணம் பிரகிருதி. அது முக்குணங்களால் ஆயது. அம்முக்குணங்கள் ஒப்ப நின்ற நிலையில் தடுமாற்றம் ஏற்பட்டதே உலகத் தோற்றத்திற்குக் காரணம் என்பது திரண்ட கருத்து. இனி, உயிர்பற்றிச் சாங்கியர் என்ன கூறுகின்றனர் என்பதை அடுத்த கடிதத்தில் எழுதுகின்றோம்.

என்றும் வேண்டும் இன்ப அன்பு.

இன்றக்குன்றடிகளார்

---

சிந்தனைக்கு.........

நாள்தோறும் உடலில் சேரும் அழுக்கை, குளித்து நீக்கித் தூய்மைப்படுத்திக் கொள்வது போலவும், நாள்தோறும் உடையில் சேரும் அழுக்கைத் துவைத்து நீக்கித் தூய்மைப்படுத்திக் கொள்வது போலவும், நாள்தோறும் உள்ளத்தெழும் பொய்மையை இறைவனை நோக்கி அழுவதன் மூலம் தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டும். அழுகை இதயத்தின் ஆழத்திலிருந்து வர வேண்டும். அழுகை பிழை திருத்தும்; பிழையிலிருந்து தவிர்க்கும்; பிறவியைத் தடுக்கும்; ஆரா இன்பத்தை அளிக்கும்.

—அடிகளார் முத்துமொழிகள்

---


## அருளோசை

ஓர் ஆண்டுச் சந்தா..........ரூ. 5-00

ஓர் ஆண்டிற்குக் குறைந்த சந்தா கிடையாது.

அறிவிப்பு: சந்தாதாரர்கள் தங்கள் முகவரிகளைத் தெளிவாக எழுதி அனுப்ப வேண்டும். சந்தா புதுப்பிப்பவர்கள் தங்கள் பழைய சந்தா எண்ணைக் குறிக்க வேண்டியது அவசியம். மணியார்டர் கூப்பனில் (அஞ்சல் நிர்வாகத்தினர் அருளோசை செயலகத்திற்குக் கிழித்துக் கொடுக்கும் கூப்பனின் பகுதியில்) தமது முழு முகவரியை அவசியம் குறிப்பிட வேண்டும்.




# திருவகீந்திரபுரம் திருக்கோயில்

ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்த 108 வைணவத் திவ்விய தேசங்களில் நடுநாட்டில் உள்ளவை, திருகோவலூர், திருவகீந்திரபுரம் (திருவயிந்திரபுரம்) ஆகும். இவற்றுள் திருவகீந்திரபுரம் என்பது, சென்னை மாயூரம் இருப்புப் பாதையில், திருப்பாதிரிப்புலியூர் நிலையத்தில் இருந்து, (கடலூர்-புதுநகர்) மேற்கே 3 கல் தொலைவிலுள்ள தலம் ஆகும். அகி-பாம்பு, இந்திரன்-தலைவன், பாம்புகளுக்கெல்லாம் தலைவன் ஆகிய ஆதி சேடன், அகீந்திரன் என்னும் சிறப்புப் பெயரால் வழங்கப்படுவான். ஆதிசேடன் ஆகிய அகீந்திரன் பெருமாளைப் பூசித்து வழிபட்ட தலமாதலின், இதற்கு அகீந்திர புரம் என்று காரணப் பெயர் அமைந்தது. அதுவே திருவயிந்திரபுரம் என்றும், திருவயிந்தை என்றும் மருவி வழங்கும்.

திருமாலின் 'அர்ச்சாவதாரம்' என்னும் திருவுருவம், தைவம் (தேவர்கள் பூசித்தது), ஆர்ஷம் (மகரிஷிகள் பூசித்தது), மானவம் (மனிதர் பூசித்தது), சைத்தம் (தானே தோன்றி என்றும் உள்ளது) என்று நான்கு வகைப்படும். அவற்றுள் திருவகீந்திரபுரத்தில் விளங்குவது, அநாதி காலமாகத் தானே தோன்றித் திகழும் "சைத்தம்" என்னும் அர்ச்சாவதாரம் ஆகும்.

இங்கே ஒரு சிறிய குன்று உள்ளது. ஆஞ்சநேயர், இராமராவணப் போர் நிகழ்ந்தபோது, இறந்துபோன வானர வீரர்களை உயிர்ப்பிப்பதற்காகச் சஞ்சீவி மலையை எடுத்துச் சென்றது போல, ஒரு சமயம் நிகழ்ந்த தேவாசுரப் போரில் இறந்துபட்ட தேவர்களை உயிர் பெற்றெழச் செய்வதற்காக, சஞ்சீவி மலையில் ஒரு சிகரத்தினைக் கொணர்ந்தார். அதுவே இக்குன்றமாக விளங்குகின்றது. ஆதலின் இதற்கு மருந்துமலை (ஔடதாத்திரி, சஞ்சீவி பர்வதம்) என்று பெயராயிற்று. இக்குன்றின்மீது ஒரு சந்நிதியும், அடிவாரத்தில் ஒரு சந்நிதியுமாக, இங்கே இரண்டு திருக்கோயில்கள் உள்ளன.

இத்தலத்தில் ஆதிசேடன் தோற்றுவித்த சேட தீர்த்தம், பூமிதேவி ஏற்படுத்திய பூமி தீர்த்தம், கருடன் உண்டாக்கிய கருடதீர்த்தம் (கெடில நதி) பிரமதேவன் படைத்த பிரமதீர்த்தம் என்னும் நான்கு புண்ணியத் தீர்த்தங்கள் உள்ளன.



முன்ஞெரு காலத்தில் மது, கைடவன் என்னும் இரண்டு அசுரர்கள் வேதங் களைத் தமது மாயையின் வலிமையினுல், பெண் குதிரையாக்கிக் கவர்ந்து சென்று மறைத்து வைத்திருந்தனர். தேவர் களின் வேண்டுகோளுக்கு இணங்கத் திருமால் மது கைடவர்களைக் கொன்று வேதங்களை மீட்டருளினுர். அப்போது அவர் கழுத்துக்குமேல் குதிரை வடிவம் உடையவராகத் திகழ்ந்தார். குதிரை முகத்துடன், கைகளில் சங்கு சக்கரங்களை ஏந்திக்கொண்டு, ஒரு கையில் வேதங் களையும், வலத் திருக்கரத்தில் ஞானமுத்தி ரையும் தாங்கி, இலக்குமி தேவியை அணைத்த நிலையில் எழுந்தருளியிருக்கும் இப்பெருமாளே அயக்கிரீவர் எனப் போற்றப்படுகின்ருர். இப்பெருமாளின் திருவுருவத்தையும், திருமந்திரத்தையும் கருடபகவான் வழங்கியருள, இவரை வழிபட்டு அருள்பெற்ற வேதாந்த தேசிகர் (நிகமாந்த மகா தேசிகர், கி. பி. 1268-1369) என்னும் வைணவப் பெருஞ் சான்ருேர், எல்லாக் கலைஞானங்களையும் உபதேசிக்கப்பெற்ருர். இத்தலத்தில் வேதாந்த தேசிகர் மிகவும் சிறப்பாகப் போற்றப்படுகின்ருர். அவர் அமைத்த திருமாளிகையும், திருக்கிணறும் தேரடி வீதியில் இன்றும் இருந்து வருகின்றன.

இங்குள்ள பெருமாளுக்குத் தேவ நாதன், தெய்வநாயகன், மூவராகிய ஒருவன், அடியவர்க்கு மெய்யன் என்றும்; நாச்சியாருக்கு வைகுண்டநாயகி, செங் கமல வல்லியத்தாயார், தரங்கமுக நந்தினி என்றும் பெயர்கள் வழங்கும். பெருமாள் கிழக்கு நோக்கி நின்ற திருக் கோலம், மார்க்கண்டேயர், பிரகலாதர் ஆகியோர் வழிபட்டு உய்ந்தனர். இங்கு வைகாவசம் என்னும் வைணவ ஆகமப் படி பூசைகள் நடைபெறுகின்றன. இத் தலத்தினைத் திருமங்கையாழ்வார் தமது பாடல்களால் மங்களாசாசனம் செய்துள் ளார்.

வைய மேழுமுண் டாலிலை வைகிய
மாயவன், அடியவர்க்கு
மெய்ய னுகிய தெய்வநா யகனிடம்
மெய்தகுவரைச் சாரல்,
மொய் கொள் மாதவி சண்பகம் முயங்கிய
முல்லையங் கொடியாட,
செய்ய தாமரைச் செழும்பணை திகழ்தரு
திருவயிந்திரபுரமே.

மூவ ராகிய வொருவனை மூவுல
குண்டுமிழ்ந் தளந்தானை,
தேவர் தானவர் சென்றுசென் றிறைஞ்சத்தண்
திருவயிந்திரபுரத்து
மேவு சோதியை வேல்வல வன்கலி
கன்றி விரித்துரைத்த,
பாவு தண்டமிழ் பத்திமை பாடிடப்
பாவங்கள் பயிலாவே.

இங்குத் திருக்கோயிலின் ஒருபுறம் கெடில நதி வளைந்தோடுவதும், மற்ருெரு புறத்தில் சிறு குன்றின்மேல் கோயில் அமைந்திருப்பதும், இயற்கைக் காட்சி யின் மாட்சிமை மிக்குத் திகழ்தல், நேரில் தரிசித்து மகிழத் தக்கதாகும். இத்திருக் கோயிலின் திருப்பணிகள் சமீபத்தில் நடந்தேறி, திருக்குட நன்னீராட்டு விழாவும் சிறப்பாக நடந்தது.

---

அடிகளார் சிந்தனை

வினையில் நீங்கி விளங்கிய அறிவினுகை உள்ள இறைவனின் தொடர்பும் சிந்தனையுமே உயிர்களை வாழ்வாங்கு வாழ்கிற வாழ்வுக்கு அழைத்துச் செல்லும். இறைவனைச் சிந்தித்துப் பேசி வாழ்வது பயனுடைய வாழ்க்கை; வினைத் தொடர்பை நீக்கியருளும் சிறப்புறும் வாழ்க்கை. இங்ஙனம் வாழ முடியாமல் உலகாயதத்தின் வழி உருண்டோடி வாழ்தல் தனக்குத்தானே கேடுவிளைவித்துக் கொள்ளும் வாழ்க்கையாகும்.

# தீராத விளையாட்டுப் பிள்ளை

## (1) கண்ணன்

முன்னுரை

பக்திநெறி தமிழ் இலக்கிய வளர்ச்சியில் ஒரு முக்கியமான திருப்பத்தை ஏற்படுத்தியுள்ளது. வைணவ சமய வழி நின்று பக்தி இலக்கியங்களைப் படைத்தவர்கள் ஆழ்வார்கள். இவர்கள் திருமால் தத்துவங்களிலும், குணங்களிலும் ஆழங்கால் பட்டு மயங்கி ஆழ்ந்தவர்கள். இவ்வுலகில் மக்கள் உய்யும்வண்ணம் எம்பெருமான் பல அவதாரங்களைச் செய்துள்ளான். அவற்றுள் இராமாவதாரமும் கிருஷ்ணாவதாரமும் எல்லோருடைய உள்ளங்களையும் கொள்ளை கொள்ளும் மாட்சியும் ஆட்சியும் பெற்ற அவதாரங்களாகும்.

ஆழ்வார்களில் நம்மாழ்வாரும் பெரியாழ்வாரும் கண்ணனின் திருவிளையாடல்களையும் தெய்விகச் செயல்களையும் முழுமையாகப் போற்றிப் பாராட்டியுள்ளார்கள். “கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர், எண்ணும் திருநாமம் திண்ணம் நாரணமே” என்றும், “செம்பெருந்தடங்கண்ணன் திரள்தோளன், தேவகி சிறுவன் தேவர்கள் சிங்கம்” என்றும் இவர்கள் பக்தி மேலீட்டால் அன்போடு அருளிய வாசகங்கள் எண்ணி எண்ணி இன்புறத்தக்கன. இவர்களில் பெரியாழ்வார் கண்ணனைக் குழந்தையாகப் பாவித்துப் போற்றிய பிள்ளைமை இன்பப் பாடல்களின் கருத்துக்களை இனி வரும் கட்டுரைகளில் காண்போம்.

ஸ்ரீ வில்லிபுத்தூரில் ஓர் அழகிய பூஞ்சோலை பூத்துக் குலுங்குகிறது. அச்சோலையில் பூக்கும் புத்தம் புதிய மலர்களை மாலையாகக் கட்டி இறைவனுக்குச் சாத்திக் கண்டுகளிக்கிறார் ஒரு பக்தர். அவருக்கு அத்தொண்டிலே அத்தனை ஈடுபாடு. பூக்குடலையும் கையுமாகவே காட்சியளிக்கும் அவர் சித்தத்தில் எப்பொழுதும் பரம்பொருளின் நினைவே இருந்து வந்தது. இவ்விதம் விஷ்ணுவையே தம் சித்தத்தில் தேக்கி வைத்து வழிபாடு செய்து வந்த அவரை மற்றவர்கள் விஷ்ணுசித்தர் என்றே அழைத்தனர். ஆனால் பாண்டியன் அவையிலே பொற்கிழி அறுத்துப் பரதத்துவத்தை நிலைநாட்டிய அவருக்குத் தமிழ்ச் சுவையறிந்த பாண்டிய அரசன் பட்டர்பிரான் என்று பட்டம் வழங்கிச் சிறப்பித்தான். அன்று முதல் அவர் பட்டர்பிரான் என்றே பலராலும் வழங்கப்பெற்றார். பட்டர்பிரானின் பக்திக்குக் கட்டுப்பட்டுப் பரம்பொருளான நாராயணன் தன் தேவியர்களோடு கருட வாகனனாய் அவருக்குக் காட்சி வழங்கினான். அக்காட்சியைக் கண்டு வணங்கிய ஆழ்வார் அப்பெருமானுக்கு—அவன் பேரருளுக்குக் கண்ணெச்சில் (திருஷ்டி தோஷம்) வந்து விடுமோ இவ்விருள் தருமாஞாலத்தில் என்று அஞ்சி பாரிக்கிறார். அப்பெருமானிடம் பொங்கி வந்த பரிவின் காரணமாகத் தன்னை மறந்து பரம்பொருளான அவனுக்கும் பல்லாண்டு பாடினார். இப்படி பரமனுக்கும் பல்லாண்டு பாடிய காரணத்தால் ஆழ்வார்களிலே இவரைப் பெரியாழ்வார் என்று மக்கள் அழைக்கலாயினர்.

விஷ்ணுசித்தராய், பட்டர்பிரானாய், பெரியாழ்வாராய் விளங்கிய இவருக்குக் கண்ணன் எம்பெருமானிடத்திலும் அவன் பிள்ளைப் பருவ நிகழ்ச்சிகளிலும் மிகவும் ஈடுபாடுண்டாயிற்று.

திருக்கோட்டியூர் சேர்தல்

ஒரு முறை இப்பெரியாழ்வார் தன்னுடைய உயிர் நண்பரான செல்வ நம்பியைக் காண வேண்டுமென்கின்ற ஆசையினால் திருக்கோட்டியூர் நோக்கிப் புறப்பட்டார். பற்பல வண்ணங்களோடு திகழும் மாடங்களையுடைய திருக்கோட்டியூர் ஆழ்வாருடைய கண்ணையும் கருத்தையும் கவர்ந்தது. அக்கோட்டியூரில் உயர்ந்த மாடங்களையுடைய வீட்டுத் திண்ணைகளெல்லாம் ஒளிமயமாய் விளங்குகின்றன. நவரத்தினங்களையும், உயர்ந்த மரகத மணிகளையும்

கா. அ. மணவாளன், எம்.ஏ., பிஎச்.டி.

இழைத்து திண்ணைகளை அமைத்துள்ளார்கள். அத்திண்ணைகளிலமர்ந்து திருமாமகள் கொழுநனான நாரணன் திருநாமங்களை ஒன்று இரண்டு மூன்று என்று விரல் விட்டு எண்ணிப் போற்றும் பக்தர்களைக் காண ஆசைப்பட்டார் ஆழ்வார். அவர் நினைத்தபடியே அப்படிப்பட்ட பாகவதர்கள் அவ்வூரில் நிறைந்திருந்தார்கள். ஆனாலும் வேறு சிலர் எம்பெருமானுடைய திருப்பெயர்களை விரல் விட்டு எண்ணிப் போற்றாமல் (ஜபம் செய்யாமல்) தங்களுடைய சரீரத்தையே பெரிய பொருளாக நினைத்து ஊத்தை வாயில் அவ்விரல்களாலே சோற்றுத் திரளையை யூட்டித் திரிந்தார்கள். மேலும் அவர்களை நோக்கி ஆழ்வார் கூறிய பாடலைப் பாருங்கள்:

"வண்ண நன்மணியும் மரகதமும்
அழுத்தி நிழலெழுந்
திண்ணை சூழ் திருக் கோட்டியூர்த்
திருமாலவன் திருநாமங்கள்
எண்ணக் கண்ட விரல்களால்
இறைப் பொழுது மெண்ண கிலாது போய்
உண்ணக் கண்ட தம் ஊத்த வாய்க்குக்
கவள முந்துகின்றார்களே"

என்று பாடிய பாடலில்தான் எவ்வளவு உன்மை பொருந்தியுள்ளது.

திருக்கோட்டியூரில் எம்பெருமான் பள்ளி கொண்டிருக்கிறான். அவன் கையில் பால் வெண்சங்கும் கூரார் ஆழியும் ஏந்தியுள்ளான். அவன் கையில் விளங்கும் வெண்சங்கம் போன்ற அன்னப் பறவைகள் அவ்வூர் வயல்களிலே திரள் திரளாகச் சஞ்சரிக்கின்றன. அவ்வூர் மக்களில் பெரும்பாலோர் எப்பொழுதும் நாத்தழும்ப நாராயணன் திருநாமத்தைக் கூவிச் சொல்லிக் கொண்டாடுகின்றனர். எங்கும் வேத ஒலியும் விழா ஒலியும் கேட்கின்றது. நான்மறையோர் கூடியாடிப் பரம் பொருளைப் போற்றுகின்றனர். அப்படிப்பட்ட ஊரிலும் அவ்வெம்பெருமானின் திருநாமங்களைப் பாடாமலும் அவன் குணங்களில் ஈடுபடாமலும் சிலர் வாழ்ந்தனர் போலும். அவர்களெல்லாம் நல்ல ஆடையுடுத்தியும், உண்டு களித்தும் வாழ்ந்தனராம். அவர்கள் பருகி, உண்டு, உடுத்தி வாழ்ந்தாலும் அவர்களாலே பருகப்பட்ட தண்ணீரும், உண்ணப்பட்ட உணவும் உடுக்கப்பட்ட ஆடையும் பாவம் செய்தனவே என்று ஆழ்வார் பகர்கின்றார்.

திருக்கோட்டியூர்

"நரக நாசனை நாவிற் கொண்டு
அழையாத மானிட சாதியர்
பருகு நீரும் உடுக்கும் கூறையும்
பாவம் செய்தன தான்கொலோ"

என்ற வரிகளில் ஆழ்வாரின் உணர்ச்சிப் பெருக்கை நம்மால் புரிந்து கொள்ள முடிகின்றது.

பூங்கொம்புகள் நிறைந்த கோட்டியூர்ப் பொழில்களிலே குயில்கள் கூவுகின்றன. கோவிந்தன் குணம் பாடுகின்றன. செழுங்கழனிகளையுடைய திருக்கோட்டியூர் செம்பொன்னாலான மதிள்களையுமுடையனவாகக் காட்சியளிக்கின்றது. செந்தாமரை மலர்கள் பூத்துக் குலுங்கும் வயல்களிலே வெண்ணிற அன்னங்கள் மின்னித் திரிகின்றன. நீர்நிலைகளிலும் வயல்களிலும் வாளை மீன்கள் ஆமையின் முதுகிலேறித் தண்ணீரில் துள்ளிக் குதிக்கின்றன. இவ்விதம் இயற்கை எழில் வாய்ந்த அத்திருக்கோட்டியூரைப் பெரியாழ்வார் போற்றியுள்ளார்.

கொம்பினார் பொழில் வாய்க் குயிலினம்
கோவிந்தன் குணம் பாடும் சீர்
செம்பொனார் மதிள்சூழ் செழுங்கழனியுடைத்
திருக்கோட்டியூர் என்றும்,
...........உறை சங்கம் போல் மடவன்னங்கள்
நிறை கணம் பரந்தேறும் செங்கமலவயல்
திருக்கோட்டியூர்

என்றும் பாடிய ஆழ்வார் படைப்பில் அருமையான ஓவியக் காட்சிகளைக் காணலாம்.

இவ்வழகிய ஊரிலே—வளமான செழிப்பான ஊரிலே எப்படித்தான் பஞ்சம் வந்ததோ அறியோம். ஆனால் அப் பஞ்ச காலத்திலும், பழங்கால (வெள்ளிக்) காசுக்கு ஒரு பிடி நெல் என்று விலையேறி விற்கும் காலத்திலும் தானியங்களை மறைத்து வைக்காமல் வரும் விருந்தினர்க்கு உணவளித்துப் போற்றிப் புகழோடு விளங்கினார்கள் அவ்வூர் மக்கள் என்றால் அவர்களின் தன்னலமற்ற தியாகத்தை என் என்பது?

காசின் வாய்க்கரம் விற்கிலும்
கரவாது மாற்றிலி சோறிட்டுத்
தேச வார்த்தை படைக்கும் வண்
கையினர்கள் வாழ் திருக்கோட்டியூர்"

என்று பாராட்டுகிறார் ஆழ்வார். ஆம்! பிற்காலத்தில் புரட்சிக்கு விளை நிலமாய் விளங்கிய திருக்கோட்டியூரின் பெருமையை இங்ஙனம் ஆழ்வார் வியந்ததில் வியப்பில்லை தான்.

குருவின் ஆணையை மீறுவதால் தனக்கு நரகம் கிடைக்கும் என்றாலும் இவ்வுலகோர் உய்யும்வண்ணம் சாதி இனவேறுபாடின்றி மதிள் மீதேறித் திருமந்திரத்தை வாரி வழங்கிய வண்மை இராமாநுசன் சொற்பதம் கடந்த அற்புதம் நிகழ்த்திய இடமு மன்றோ திருக்கோட்டியூர். அவ்வூருக்குச் சென்ற ஆழ்வார் கோயிலில் பள்ளிகொண்டிருக்கும் பரமனைப் போற்றினார்.

"நாதனை நரசிங்கனை நவின்றேத்து
வார்களுழக்கிய
பாத தூளி படுதலால் இவ்வுலகம்
பாக்கியஞ் செய்ததே"

என்று அந்த எம்பெருமானை ஏற்றிப் போற்றும் பாகவதர்களுடைய பாத தூளி படுதலாலே இவ்வுலகம் பாக்கியஞ் செய்ததாக நெஞ்சாரக் கூறுகிறார் ஆழ்வார்.

கண்ணனை வணங்கினார்

அக்கோயிலிலே அருமையாகக்காட்சி வழங்குகிறான் கண்ணன். ஆழ்வாரும் அக்கண்ணன் வடிவழகில் ஈடுபடுகிறார். தன்னை மறந்தார். திருக்கோட்டியூரையே திருவாய்ப்பாடியாக நினைத்தார். கோட்டியூர் எம்பெருமானே கண்ணனாக அவதரித்ததாகக் கருதினார். முன்பு ஆயர்பாடியில் நந்தகோபருடைய திருமாளிகையில் கண்ணன் பிறந்த காலத்தில்-உண்மையில் வளர்ந்த காலத்தில் அவ்வூராரெல்லாம் எவ்வளவு மகிழ்ச்சி அடைந்தார்களோ அவ்வளவு மகிழ்ச்சியையும் கோட்டியூர் மக்கள் அடைந்ததாக ஆழ்வார் கூறுகிறார். அவர்கள் ஆடிப் பாடிக் களித்த விதத்தையும் அக்கண்ணன் பிறந்து வளர்ந்த விதத்தையும் பல பருவங்களிலே பிள்ளைத் தமிழாகப் பெரியாழ்வார் பாடியுள்ளார். கண்ணன் பிறந்த நாளில் மக்கள் பெற்ற இன்பத்தையும் அக்கண்ணனைப் பல நிலைகளில் வளர்த்தயசோதையின் மகிழ்ச்சியையும் அடுத்த கட்டுரையில் காண்போம்.

(தொடரும்)

## பேரவை அன்பர்களுக்கு
## ஓர் அறிவிப்பு

தமிழ்நாட்டில் ஆங்காங்கே கடவுட் கொள்கை எதிர்ப்பாளர்கள் 'கடவுள் இல்லை' என்றும், சமய நெறியை இகழும் வகையிலும் கல்வெட்டுக்கள் வைத்தும், சுவர்களிலும் பிற இடங்களிலும் எழுதியும் வருகின்றனர். அவர்கள் செயலுக்கு நாம் தார்மீக ரீதியாக மறுப்புத் தருவது நமது கடமை. ஆதலால், பேரவை அன்பர்கள் 'கடவுள் இல்லை' என்று கல்வெட்டு வைக்கப்பட்டுள்ள இடங்களில், அந்தக் கல்வெட்டுக்களுக்குப் பக்கத்திலோ, எதிர்ப் பக்கத்திலோ வாய்ப்பான இடங்களில் அடியிற்கண்ட பாடலைக் கல்வெட்டில் பொறித்து அமைக்கலாம். இக் கல்வெட்டுக்குரிய செலவினை ஆங்காங்கே பேரவை அன்பர்கள் நன்கொடை பெற்றுச் செய்யலாம்.

"ஒன்று என்று இரு; தெய்வம் உண்டு என்று இரு; உயர் செல்வம்எல்லாம்
அன்றுஎன்று இரு; பசித் தோர்முகம் பார்; நல் லறமும் நட்பும்
நன்றுஎன்று இரு; நடு நீங்காமலே நமக்கு இட்டபடி
என்றுஎன்று இரு; மனமே உனக்கே உப தேசம் இதே!

—பட்டினத்து அடிகள்

—ஆசிரியர்




முன்னுரை :

உயிர்க்குலம் எண்ணில; அளப்பில; கணக்கில் வந்துள்ள உயிர்க்குலம் ஒரு பகுதியே! பெயர் பெற்று வழக்கில் வந்துள்ள உயிர்க்குலமும் ஒருபகுதியே! நம்முடைய கவனத்தைக் கடந்து-பெயர் களைக் கடந்து வாழும் உயிர்க்குலம் பலப் பல. உயிர்க்குலத்தின் எண்ணிக்கை பல நூறுயிரமாக இருப்பினும் அவற்றுள் விஞ்சிய பெருமை மனித உயிருக்கே உண்டு. மானிட உயிர் விலைமதிப்பற்றது. பல நூறு ஆண்டுகளின் வளர்ச்சியில்-முதிர்ச்சியில் முகிழ்த்ததே மானிட உயிர். மற்றைய உயிர்த் தொகுதிகள் வெற்றிக்கு ஆட்படுபவை. மானிட உயிர் வெற்றி களை ஆளுபவை. "மானுடம் வென்ற தம்மா!" என்பான் கம்பன். மானிட உயிரின் அருமை நோக்கித்தானே "மனித்தப் பிறவியும் வேண்டுவதே" என்றூர் அப்பரடிகள். இயல்பில் மானிட சாதி உயர்வுடையதே. ஆயினும், உயர்வுக்குரிய காரணங்கள் முற்றப் பொருந்தாவிடின் "மானிட அமைப்பில் விலங்குகள்" என்று இலக்கியம் ஏசும்; சான்றோர் பழிப்பர்! மானிட சாதியின் உயர்வுக்கு அடிப்படை அது அறிவுள்ளது என்பதுதான்! மனம் உள்ளது. இல்லை, இருக்கும் மனம் இயங்குவது; உணர் வுடையது. இந்தச் சிறப்பியல்புகள் சிறப் பாக அமையாது போனல் மானிட சாதியி லும் விலங்கியல் உணர்ச்சிகளின் வெளிப் பாடுகள் காரணமாக வேற்றுமைகள் கால் கொள்கின்றன. அவ்வழி, பகை கால் கொள்கின்றது; கலகங்கள் தோன்றுகின் றன; போர்கள் மூளுகின்றன. வளம்-வறுமை வேறுபாடுகளின் காரணமாகப் பொதுமை மறைகிறது. இந்தக் குறை கள் நீங்க மனிதனைச் சிந்திக்கப் பழக்க வேண்டும். அவனுடைய அறிவுப்புலனை இயக்குதல் வேண்டும். மனத்தின் இயக்கத்தை வெளிப்படுத்துவது உணர்வே. உணர்வின் மையம் கருத்துக் களே! கருத்துக்களைப் பெறும் வாயில் கற்றலும் கேட்டலுமாம். கற்ற-கேட்ட நற்செய்திகளின் வழி வாழ்க்கையை இயக்கும்பொழுது அறிவு தோன்றுகிறது. அறிவு மற்றவர்களோடு பழகும்பொழுது ஒழுக்கமாக உருப்பெறுகிறது.

இத்தகைய மானிட சாதியின் ஒழுக்கம் சிறப்புற அமைய வேண்டும். மனித குலத்தில் பொது ஒழுக்கம் சிறக்குமாயின்



ஒருலகம் தானே தோன்றும். இன்று "ஒருலகம்" என்பது வாய்ப்பேச்சே! "யாதும் ஊரே! யாவரும் கேளிர்!" என்பது மேடையோடு சரி! "ஒன்றே குலமும், ஒருவனே தேவனும்!" இந்த முழக்கம் பஜனை மடங்களிலேயே கேட்கிறது. ஆனால், பஜனை முடிவில் மரியாதை யாருக்கு? என்ற சண்டை நீங்கினபாடில்லை. சுண்டல் விநியோகச் சிக்கல்கள் தீர்ந்தபாடில்லை. அன்பிற் பிறந்த மதங்கள் ஆதிக்க உணர்வுடையவர்கள் கையில் சிக்கி மதச்சண்டைகள் மலிந்து வருகின்றன. பாபத்தை நீக்க-புண்ணியத்தை வழங்கத் தோன்றிய பிரார்த்தனைக் கூடங்கள் பணம் பேரம் பேசும் வணிக நிலையங்களாக உருமாறி விட்டன. இவ்வளவுக்கும் காரணம் மனித மனம் தடம்புரண்டதுதான்! தடம் மாறியதற்குக் காரணம் தகுதியல்லாத போதனைகள்; எல்லைவயப்பட்ட சிறுமைச் சிந்தனைகள்! மனித உலகம் மேம்பாடடைய மனம் திருந்த வேண்டும். மனம் திருந்த மருந்து நற்கருத்தேயாம் நச்சுத் தன்மையான கருத்துக்கள் எழுத்தில், பேச்சில் அகற்றப்பெற வேண்டும். உயர் கருத்துக்கள் ஊட்டப்பெற வேண்டும். கருத்துக்களே மானிட சாதியின் புகழுக்கு ஊற்று. இத்தகைய உயர் கருத்துக்கள் உலக மொழிகளில் உள்ளன; சமயச் சாத்திரங்களில் உள்ளன. ஆயினும் முழுமையான நலக்கருத்துக்கள் நமக்குத் தேவை. காலத்தின் விளைவாகச் சில உயர்ந்த கருத்துக்களோடு களையும் கலந்திருக்கும். களை நீக்குதல் கற்றறிந்தார் கடன். எந்த விலை கொடுத்தும் மனித குல ஒருமைப்பாட்டைக் காப்பாற்ற வேண்டும். ஒருமைப்பாட்டுக்குரிய கருத்துக்களையே வற்புறுத்த வேண்டும்; விளக்க வேண்டும்; எழுத வேண்டும்; பேச வேண்டும். ஆனால் ஒரு தற்காப்பு விதியும் தேவை. புலிக்கும் பூனைக்குமிடையில் ஒருமைப்பாடு நிலவத்தான் வேண்டும். ஆனால் புலி, புலியாகவே பூனையை எடுத்துச் சாப்பிடும் பட்சத்தில், பழக்கத்தில் இருக்கும் வரையில் பூனையிடம் போய்ப் புலியிடம் நேசமாக இரு என்று பேசுவது நெறியும் அன்று; முறையும் அன்று. அதுபோலத்தான் ஆண்டான்-அடிமை; உடையார்-இல்லாதார், உயர்ந்தார்–தாழ்ந்தார் என்ற வேறுபாடுகளைச் சகித்துக் கொள்கின்ற ஒருமைப்பாடு, உபதேசம் நீதிக்குத் துணை செய்யாது. ஆதலால், மனிதகுல ஒருமைப்பாட்டுத் தத்துவம் மிகமிக உயர்ந்தது. அதை நோக்கித்தான் உலக அறிஞர்கள் கருத்துக்களைத் தீட்டினர். சமய ஞானியர் சித்தாந்தங்களைக் கண்டனர். ஆயினும், வேற்றுமைகளே வளர்ந்து வந்துள்ளன. எல்லைகளே பெருகியுள்ளன. இதயங்கள் சுருங்கி வந்துள்ளன. இன்று சுருங்கிக் காட்சியளிக்கும் மனித இதயத்தை விரிவடையச் செய்ய–வேற்றுமைகளைக் குறைக்க-வேற்றுமைகளைக் கடந்த ஒருமைப்பாட்டைக் காண–ஒருமைப்பாடுடைய ஒருலகம் காண முயற்சி செய்ய வேண்டும். அந்த வழியை நமக்குக் காட்டும் கருத்து எது? அக்கருத்தினை வழங்கும் நூல் எது? (தொடரும்)

---

அறமும் ஒழுக்கமும் காலத்துக் காலம் மாறுபடும். சமுதாயம் வளர வளர வேறுபடும். ஆனால் ஒற்றுமை மட்டும் மாறுபடுவதில்லை. அதுதான் பிறருக்குத் தீமை செய்யாமல் வாழ்வது என்பது. இந்த அடிப்படைத் தத்துவத்தைப் புரிந்து கொண்டால் அறமே சமயம் சமயமே அறம் என்ற கருத்து விளங்கும். இரண்டும் வெவ்வேறல்ல.

—தவத்திரு. குன்றக்குடி அடிகளார்

# மற்றெருரு மாடிலேன்

தி. சு. கோவிந்தசாமி,

முன்னுரை

"திருமுறைகட்குப் பெருமை அவற்ரு சிரியரால் உண்டாயிற்று. ஆகவே, அவை பாராயணத்திற்கு அர்ஹமாயின. அவற்றிற்குப் பொருள் செய்தல் பாபச்செயல் என்னும் எண்ணம் இன்னும் தமிழ்மக்கள் மனத்தின் சாமானியத்தின் விட்டகன்றிலது" -என்று திரு. எஸ். அனவரத விநாயகம்பிள்ளை எம். ஏ. எல். டி அவர்கள் சைவ சித்தாந்த வரலாறு என்ற நூலில் (1911) கூறியுள்ளார்.

திருமுறைகள் தமிழ்வேதம். வேதத்திற்கு இறைவனே பொருள் அருளிச் செய்தானுகலின் பசுவர்க்கத்தவர் இதற்கு உரை இயற்றுதல் கூடாதென்பதே அச்சம்பிரதாயமாகும். இது பற்றியே திருமுறைகட்குப் பாடியம் எழுதப்பட வில்லை. திருமுறைப் பாடல்கட்கு இஞ்ஞான்று சில பல உரைகள் வந்திருப்பினும் ஒவ்வோர் உரையும் வேறுபடுதல் கண்கூடு. எனினும் தற்காலம் பதப்பொருளுணர்ச்சியுடன் தெரிந்து கொள்ள ஒருவாறு அவைகள் பயன்படுவது பாராட்டத்தக்கது. ஆனல் திருமுறைகள் ஓதி ஓதி உணரத்தக்கன. அவைகள் அவரவர் தவத் திற்கும் அறிவுக்கும் தக்கவாறு பொருள் விரிந்து செல்லும் இயல்புடையன. இதுதான் பொருள் என வரையறுத்துக் கூறுதல் எளிதன்று என்பதும் நாம் உணரவேண்டும்.

திருநாவுக்கரசர் பெருமான் பாடல் ஒன்றை எட்டின மட்டில் சிந்தனைக்குக் கொண்டு வருவோம்.

### இறைத் தன்மை

பெரியோர்கள் நூல்களில் உயிரில் உலகம், உயிர்உலகம் என்று குறிக்கின்றனர். உயிர் இல்லாத உலகங்கள் ஐம்பெரும் பூதங்களும், கதிரவனும் திங்களும் ஆவன. ஐம்பெரும் பூதங்களும் வேறு வேறு உருவம் அடைந்து இயங்குதலும், கதிரவனும் திங்களும் உருவத் துடன் அமைந்து இயங்குதலும் இறைவ னுடைய ஆற்றலினல் விளங்குகின்றன.

உயிர் உலகிற்கு இறைவன் உயிராய் நின்று இயக்குகிருன்.

இறைவன் உயிரினேடும், உலகினேடும் அத்துவிதமாய் நிற்கும் நிலையினுலே உயி ரில்லாத உலகம் யாதொரு பயனையும் அடைவ தில்லை.

இறைவன் நிறைவுடைய பொருளாதலால் ஒரு பயனையும் வேண்டுவானல்லன்.

ஆணவ மலத்தினுலே பிணிப்புண்டிருக்கிற உயிரே அம்மலப் பிணிப்பினின்றும் நீங்கி அறிவு விளங்கப்பெற்று இன்பம் அடைத லாகிய பெரும்பயனை அடைதற்குரிய பொரு ளாகும்.

ஆகவே, இறைவனே உயிர்கட்கு கட்டு நிலை யினும் வீட்டு நிலையினும் களைகணுயுள்ளான் என்பதும், உயிரானது கட்டு நிலையில் அவனை அறியமுடியா தென்றும் வீட்டு நெறி யில் உணரலா மென்பதும் இங்கு கருதத் தக்கது.

உயிரில்லாத உலகத்திற்கு உருவமாகியும் உயிர் உலகிற்கு உயிராகியும் விளங்குகின்ருன் என்பதை உணர்த்த "உருவமு முயிருமாகி யோதியவுலகுக் கெல்லாம்" என்ருர்.

பெருவினையினுலுண்டாவது பிறப்பு. இனம் பற்றி இறப்பும் கொள்ளப்படும். கட்டினுல் உயிர்கட்கு பிறப்பு இறப்பு உண்டாகிறது. அதாவது அநாதியே மறைக்கப்பட்டுள்ள ஆணவ மலத்தினல் உயிர்கள் கன்மதத்தைச் செய்கின்றன. அவை நல்வினை தீவினை எனப் பட்டு அதற்குப் பயனுகிய இன்ப துன்பங்களை நுகர்தற்பொருட்டு இறைவன் உடல்களைக் கொடுப்பதாகிய பிறப்பு இறப்பு நிகழ்கின்றன.

உடலைக் கொடுக்காமலேயே மலமாயை கன்மங்களை நிவர்த்தித்தல் கூடாதோ? எனின் மன்னவன் தன் மகனுக்கு அரசுரிமையைக் கொடுக்க விருப்ப முடையனுயினும், மகன் பிறந்த நாளிலாவது, அல்லது சிறு வயதிலாவது கொடுப்பதில்லை. கொடுத்தாலும் அதை வகித்துக் கொள்ளும்ஆற்றல் மகனுக்கு உண்டாக மாட்டாது. இதையறிந்த மன்னன் மகனுக்கு, நெடுங்கணக்கு முதலாகக் கல்வி கற்பித்து அதனுலுண்டாகும் புத்தி நுட்பத்தை

தெரிந்தபின்பே தனது அரசுரிமைகளைக் கொடுப்பான். அதுபோல உயிர்கட்கு மலத்தை நீக்கி திருவடியைக் கொடுத்தலே சிவபெருமானது விருப்பமாயினும், அதற்குரிய பக்குவம் இல்லாது செய்யின் பயன்படாவாதலின், பக்குவம் வருவதற்கான முறைகளைச் செய்ய எண்ணி பிறப்பிறப்புக்கான உடல் முதலியவற்றைக் கொடுக்கின்றான். இதை அவன் செய்கின்றானதலின் உயிர்கட்கு (பந்தம்) கட்டு ஆகியும், மலம் நீங்கப் பெற்ற உயிர்கட்கு வீடாகியும் (முத்தி)நிற்கின்ற தலைவன் ஆவான் என்பதை உணர்த்த,

"பெருவினைப் பிறப்பு வீடாய் நின்ற வெம்பெருமான்"-என்றார். [இக் கருத்தை மணிவாசகப் பெருமான்" பந்தமுமாய் வீடும் ஆயினார்க்கு"-என்று திருப்பொற் சுண்ணத்தில் அருளியுள்ளார் ]

## இறைவனின் உறைவிடம்

பந்தமும் வீடும் ஆய பரமன் எங்கே இருக்கிறான்? என்ற எண்ணம் உண்டாகுமல்லவா! அவன் எழுந்தருளியுள்ள இடம் சிற்றுயிர்களாகிய நம்மனோர்க்குத் தெரியா. அப் பெருமானே பிறந்திறந்துழலுகின்ற உயிர்களை இந்நிலவுலகத்தினின்று எடுக்கும் நிமித்தம் தலம், தீர்த்தம், மூர்த்தி என்ற மூன்று வடிவாக விளங்குகின்றான்.

தலப்பெருமை தெரிந்து சென்று தீர்த்தப் பெருமை தெரிந்து மூழ்கி மூர்த்தியின் பெருமை தெரிந்து வழிபடல் வேண்டும். திருவண்ணாமலைத் தலத்தைப் பற்றி அறியாதார் இரார். இத்தலத்தைப்பற்றி ருக்வேத சம்ஹிதை முதலான பல நூல்கள் பெருமை தெரிவிக்கின்றன. இத்தலத்தின் செழுமை அங்கு வீழும் அருவியால் தெரிகிறது. அருவிலோ பொன்னைச் சொரிகிறது. இங்கு எழுந்தருளியுள்ள பெருமானே திருமால், பிரமன், இந்திரன் முதலிய தேவர்கட்கும் தலைவனாவான். இத்தகைய பெருமானை அறைகூவி அழைக்கின்றார் நாவரசர்.

"மிக்க, அருவி பொன் சொரியு மண்ணாமலையுளாய்! அண்டர் கோவே!" என்று. எதற்காக அழைக்கின்றார்? அவரோ சிவபெருமானால் நேரே ஆட்கொள்ளப்பட்டவர். அவருக்கு ஒரு குறையும் இல்லை. "தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற கருணை அவருக்கு.

மல்லைஞாலத்து வாழும் உயிர்க்கெல்லாம் எல்லையான பிரானாகிய சிவபெருமானது திருவடிகளைப் பெறுவதே வீடு பேறு எனச் சைவங் கூறும். உயிர்கள் திருவடி யாத்திரைக்காரர்களே. யாத்திரையின் முடிவு திருவடியடைதல். இதையடைவது தவிர உயிர்கட்கு வேறு புகலிடம் இல்லை. இடத்தையும் அவ்விடத்தைக் கொடுப்பவனையும் கண்டால் அதை அடையக் கேட்டு முயல வேண்டாவோ? வேண்டாது வாளாவிருத்தல் என்ன நியாயம்? 'உலகத்தீரே திருவண்ணாமலையில் எழுந்தருளியுள்ள தேவர்கள் தலைவனாகிய சிவபெருமானது திருவடியை வேண்டுங்கள். வேண்டிப் பெறுவீர்களாக! அத்திருவடிகளல்லாமல் சேருவதற்கு வேறு இடம் நான் காணேன். அதை எனக்கு அருள்வாயாக!' என நம்பொருட்டு வேண்டுகிறார்.

"மருவி நின்பாத மல்லால் மற்றொரு மாடிலேனே" என்பது அவர் வாக்கு. நாமும் அவர் கூறிய வழியில் செல்ல முயல்வோமாக! [மாடு—இடம்]

இனி இப்பாடலைப் பார்ப்போம்:

திரு அண்ணாமலை-திருநேரிசை

"உருவமு முயிருமாகி யோதிய
வுலகுக் கெல்லாம்
பெருவினைப் பிறப்பு வீடாய்
நின்ற வெம்பெருமான் மிக்க
அருவி பொன் சொரியு
மண்ணாமலையுளாய்! அண்டர் கோவே!
மருவி நின்பாத மல்லால்
மற்றொரு மாடிலேனே!

—திருநாவுக்கரசர்

உலக உயிர்களுக்குத் தாயும், தந்தையுமாகித் தண்ணருள் பொழியும் புனிதன் பிரார்த்தனைக்குப் பயன்படுவதால் திருக்கோயில்கள் அருளியல் விளைவிக்கும் பண்ணைகள்தாமே;

—தவத்திரு குன்றக்குடி அடிகளார்

# நன்னெறி

## உண்மைப் பொருள்

சீலத்திரு. ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்

"சன்மார்க்கம் சகலகலை புராண வேத
சாத்திரங்கள் சமயங்கள்
தாம்பலவும் உணர்ந்து,
பன்மார்க்கப் பொருள் பலவும் கீழாக, மேலாம்
பதிபசுபா சம்தெரித்துப்.
பரசிவனைக் காட்டும்
நன்மார்க்க ஞானத்தால் நாடி ஞான
ஞேயமொடு ஞாதிருவும்
நாடா வண்ணம்
பின்மார்க்கச் சிவனுடனும் பெற்றி, ஞானப்
பெருமையுடை யோர்
சிவனைப் பெறுவர் காணே"

என்னுந் திருவிருத்தம், சிவஞான சித்தியாருள் எட்டாவது சூத்திரத்தின் உரையாய் திருப் பாக்களுள் இருபத்திரண்டாவது. இதற்குப் பலர் உரையெழுதினர். அவற்றோடு இவ்வுரை யையும் ஒருங்கு வைத்துணர்தல் உணர்வினர் கடனாகும். 'ஞானத்தை நாடி' என்றும் பாடம் உண்டு. அது பொருந்தாமைக்குரிய காரணம் பின்னர்க் காட்டப்படும். சூ. 8 : 23, 27, 30, 31, 34, 36, 37. சூ. 9: 4, 10, 11, 12. சூ. 10:-2, 4:– சூ. 11-2, 8.

சிவஞான முனிவர் உரை:- "புறத்தொழில் அகத்தொழில் இரண்டும் இன்றி, அறிவுத் தொழில் மாத்திரையானே அம்மூன்று திரு மேனிக்கும் மேலாய், அகண்டாகார நித்த வியாபக சச்சிதாநந்தப் பிழம்பாய் நிறைந்து நிற்கின்ற சிவபிரானிடத்தில் செய்யும் வழிபாடு ஞானம் எனப்படும்" என்பது இதன் பொருள்.

'வேதம் என்றது வேதம் சிவாகமம் இரண்டி னும் உள்ள கருமகாண்டத்தை. சிவாகமும் வேதம் என வழங்கப்படும். 'பாசஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரன்' (சூ. 9), 'வேதசாத்திரம் மிருதிபுராண கலைஞானம் எல்லாம் பாசஞானம்' 'வேத சகல கலைஞானங்கள்' (சூ. 12) என்ற வற்றால் முனிவர் உரை எப்படிப் பொருந்தும்?

'கீழுள்ளவற்றைக் கீழெனக் கண்டு கழித்தா லன்றி மேலுள்ளன பயன்படா.

"பதிபசுபாசம் தெரித்தலாவது:–

அம்மூன்று பொருளையும் தடத்தலக்கணத் தின் வைத்து வகுத்துணர்த்துதல்."

"பரசிவனைக் காட்டலாவது:-

அம்மூன்றனுள் பதிப் பொருள் ஏனைப் பாச பசுக்களுக்கு மேலாதல் இனிது விளங்கச் சொருபலக்கணத்தின் வைத்துணர்த்துதல்."

"ஈண்டு ஞானம் என்றது ஞானசாத்திரத்தின் மேற்று தெரித்துக் காட்டும் ஞான நூல் எனவே ஞானகாண்டம் எல்லாம் நூலாருந்ததி நியாயம் பற்றி இங்ஙனம் இருபகுதிப் பட நிகழும் என்பதாயிற்று."

"நாடுதல்-சிந்தித்தல், நாடியெனவே, நாடு தற்கு வேண்டப்படும் ஓதல் கேட்டல்களும் உடன் கொள்ளப்படும்."

"பின்மார்க்கச் சிவன்:-பின்னுதல்–அத்துவித மாதல்."

"நாடாவண்ணம் பின்னிய சிவன் என்றுரைக்க மார்க்கம் இடைப்பிறவரல்."

"சன்மார்க்கமாவது உணர்ந்து (கழித்து) நாடி உடனும் பெற்றி என வினைமுடிவு செய்க."

இவ்விசேடவுரையுள். பதிபசுபாசம் தெரித் தலும் பரசிவனைக் காட்டலும் ஞான நூல் வினையாதல் உணர்த்தப்பட்டது. ஞான காண்டம் இருபகுதிப்பட நிகழ்தலும் கூறப் பட்டது.

பதிபசுபாசம் தெரித்தல் பரசிவனைக் காட்டல் இரண்டும் ஞானநூல் வினையாயின் இருபகுதிப் படச் சொல்ல வேண்டா.

உமாபதி சிவனார், தாம் அருளிய சிவப் பிரகாசத்திலே,

பலகலை ஆகமவேதம் யாவையினும் கருத்துப் பதிபசுபாசம் தெரித்தல் என்றருளினர். அதில் ஆகமவேதம் இரண்டும் கூறப்பட்டன. வேதம் சிவாகமத்தை யுணர்த்தியதாயின், கீழாகக் கழிக்கப்படும் பலவற்றுள் அச்சிவாகமும் அடங்கும். கரும காண்டத்தைக் கழித்தல் ஒல்லும் எனில், சிவாகம பாதங்களுள் கிரியா பாதத்தைக் கழித்தல் வேண்டி வரும்.

1. பதிபசுபாசந் தெரிக்கும் ஞானத்தால் நாடி

2. பரசிவனைக் காட்டும் ஞானத்தால் நாடி

என்று இருவகையாக் கொள்ளல் வேண்டும் என்பது ஆசிரியர் அருணந்திதேவ நாயனர்

திருவுள்ளக் கிடையாகும். ஆதலால், அது முனிவரது உரையால் அறியப்பட்டிலது.

மேலும் சிவப்பிரகாசத்திலே ''உயர் ஞானம் இரண்டாம். (1) மாருமலம் அகல அகலாது மன்னு போதத் திருவருள் ஒன்று. (2) ஒன்று அதனைத் தெளிய வோதும் சிவாகமம் என்று உலகறியச் செப்பும் நூல்'' என்றதறிக. இவ்விரண்டு ஞானத்துள்ளே போதத் திருவருளைக் "கருத்திலுரை திருவருள்" என்றும் சிவாகமத்தை "இறைவன் நூல்" என்றும் அவ்வாசிரியரே அருளினர்.

சிவாக்கிர யோகிகளும் பேருணர்வுருவினராகிய வெள்ளியம்பலவாணத் தம்பிரானரும் (1) பதிபசுபாசந் தெரிக்கும் ஞானம் (2) பரசிவனைக் காட்டும் ஞானம் என்று இருபகுப்பாக் கொண்டு உணர்த்தியவாறு உணராதார் இனியேனும் உணரக் கடவர். இதனைப் பின்னர் விளக்குதும்.

ஞானவரண மாபாடியத்துள் எழுதிய விளக்கம் உணர்வு மிக்கார்க்கும் உவகை மிகுக்கும். ஆதலின் அவ்விளக்கத்தை இதில் எழுதுதும்.

"சன்மார்க்கம் சிவனுடனும் பெற்றியாகலின் அந்த ஞானப் பெருமையுடையோர் சிவனைப் பெறுவர்." இது முடிபுணர்த்தியது.

''சன்மார்க்கம் ஞானமார்க்கம்'' ''நித்திய மான ஞானத்தான் நித்தியமான வீடு பெறலின் ஞானமார்க்கம் சன்மார்க்கமாம்.'' (சத்-நித்தியம்).

"மற்ற மூன்றும் (சரியை, கிரியை, யோகம்) அநித்தியமான கன்மத்தால் அநித்தியமான பத முத்திக்கு ஏது ஆகலின், சன்மார்க்கம் அன்ரும். ஆயினும், ஞானமான சன்மார்க்க ஏது ஆகலின், உபசாரத்தாற் சன்மார்க்கமாம். அது 'சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்ரமார்க்கம் தாதமார்க்கம் என்று சங்கரனை அடையும் நன்மார்க்கம் நால்' என ஆசிரியர் உபசரித்த வாற்ருன் உணர்க"

'தாம்' என்றது சகலகலை முதலாய அஃறிணைப் பன்மையை உணர்த்த வேண்டாமையின், ஞானத்திற் சரியாதி நான்குமுடைய ஞான சாதகர்தாம் எனக்கொண்டனர்.

'சகலகலை' என்றதில் உள்ள அடையைப் புராணுதியவற்றிற்கும் இயைத்துச் சகல கலைகளும் சகல புராணங்களும் சகல வேதங்களும் சகல சாத்திரங்களும் சகல சமயங்களும் ஆகிய பலவும் உணர்ந்து எனப் பொருள் உரைக்க.

புலிவிற் கெண்டை பொறித்தான் என்றது போலச் செயற்படு பொருள் சிறந்து நிற்றலின் புலியைப் பொறித்தான் வில்லைப் பொறித்தான் கெண்டையைப் பொறித்தான் எனப்பொருள் கோடல் போலச் சகலகலையை(யும்) உணர்ந்து, சகல புராணத்தை(யும்) உணர்ந்து, சகல வேதத்தை(யும்) உணர்ந்து சகல சாத்திரங்களை(யும்) உணர்ந்து, சகல சமயங்களை(யும்) உணர்ந்து, சகலகலை சமயங்கள் பலவற்றையும் உணர்ந்து எனப் பொருள் கூறுக.

வேதஞ் சாத்திரம் என்று ஒரு பதிப்பில் உள்ளது. அது பாடம் ஆகாது.

"வேதஞ் சாத்திரம் என்று பாடம் இன்று, உண்டாயினும் இன்னேசை பயவாமையின் அவ்வாறு ஆசிரியர் கூருர்."

கலை முதலாயின எல்லாச் சமயங்கட்கும் பொதுவாகலின் முற்கூறினர்.

இவ்வாறு வரும் கருவி நூல்களும் செய்கை நூல்களும் தம்முள் வேறுபாடு தோன்ற அவரவர் சமய நூல்களிற் கூறுவதாகலின், சமய நூல்களைப் பிற்கூறினர்.

எல்லாச் சமய நூல்களையும் உணர்தல் சின்னுட் பல்பிணிச் சிற்றறிவினேர்க்குக் கூடாமையின், ஈண்டுக் கூறுதல் நின்று பயன் இன்மை எனலாம். அது பொருந்தாது. இந்த வசனம் வைநயிகருள் அதமராயுள்ள இலெகிகஜநவிஷயம்.

'புறச்சமய நெறி நின்றும்' என்றதனுள் "வேத சிரப்பொருளை மிகத் தெளிந்தும் சென்ருல் சைவத் திறத்தடைவர். இதிற் சரியை கிரியை யோகம் செலுத்திய பின் ஞானத்தால் சிவனடியைச் சேர்வர்.'' என்றவாறே முற்பிறப்பினும் இப்பிறப்பிற் பிரமசரியாதி அவத்தைகளினும், எல்லாம் கற்றுத் தீவிர பேத சத்திநிபாதம் உண்டாய்ச் சாம்பவி தீக்கை பெற்றுத் திருவருளுடையவர்களே ஈண்டைக்கு அதிகாரிகள் ஆவார்கள். ஆதலின் அவர்க்குக் கூடுமாற்ருற் பயன்பட மொழிந்தது என்க. அது, ''திருவருள் கொடுத்து மற்று இச் சிவப்பிரகாச நன்னூல் விரிவது தெளியுமாற்ருல்'' என்பதனுல் உணரப்படும்.

இவ்வாறு உணர்ந்தோர் மெய்கண்ட தேவ நாயனுர், திருவள்ளுவ தேவ நாயனுர்.

பிறரோ எனில் அவர்கள்

பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாங் [காதல்
சிறந்து நின்சேவடியே சேர்ந்தேன்— [நிறந்திகழும்
மைஞ்ஞான்ற கண்டத் தெம்வானேர் [பெருமானே
யெஞ்ஞான்று தீர்ப்பதிடர்"

என்ற காரைக்காலம்மையார் போன்ருர்.

இன்னோர் வைநயிகருள் உத்தமராய்க் குருவருள் முதலானவற்றான் உணருமவர்.

இத்தன்மையர், "பலவிதம் ஆசான் பாச மோசனந்தான் பண்ணும்படி நயனத்தருள் பரிசம் வாசகம்" என்பதனாற் சிவனே ஆசாரிய மூர்த்தியாய் அருளிய திருஞான சம்பந்த மூர்த்தி முதலிய மூவரும் மாணிக்க வாசக மூர்த்தியும் பட்டினத்துப் பிள்ளையும் அருணந்தி தேவரும் அன்ன பிறரும் ஆவர். குருவருள் சிறிது பண்ணினது கொண்டு முழுதுமுணர்ந் தோர் இவர். அவ்வாறு சாம்பவி தீக்கை முதலியவற்றான் முழுது முணரவரும். காமி காகம வசநம் இதற்குப் பிரமாணம் (பக்கம் 371, 372 பார்க்க.)

உலகத்திலும் பட்டர், பிரபாகரர், சங்கரா சாரியர் முதலானோரும் சருவ வித்தியா பாரங்க தராகக் காண்டலால், அணிமாதி சித்தி யுண்டாம் யோக தீட்சாபரியந்தம் முடிந்த சிவயோகிகள் சிவஞான தீட்சை பெற்றால், அவர்க்கு முற்றுணர்வு வருதல் அரிதோ? வரும். இத்தன்மையர் அன்றிப் பிராகிருதர் ஈண்டு அதிகாரிகள் அல்லர். இதனானேயன்றே ஆசிரியர்,

1. "போதம் மிகுத்தோர் (பண்டை நற்றவத் தாற்றோன்றிப் பரமனைப் பத்தி பண்ணுந் தொண்டர்) சாமுசித்தர்.

2. தொகுத்த பேதைமைக்கே பொருந்தி னோர். பிராகிருதர்.

இவர்க்கு அன்றிக்

3. கதிப்பாற் செல்ல ஏதுநெறி எனுமவர்கட்கு மார்க்கர் கண்ட நூல் ஓதி வீடு காதலிப்ப வர்கட்கு அறிய" எனக் கூறியதும் ஆம். வைநயிர்க்கு அறிவிக்க

இனிப் பலவும் என்ற முற்றும்மையை எச்ச வும்மையாக் கொண்டு சிறிது உணரினும். திருவருள் பெற்ற அதிசயத்தால், கேட்டல் சிந்தித்தலாதி ஞானப்பியாசம் பண்ணக் கூடும்.

முற்பிறப்பிற் கற்ற வாசனையால், செவ்வி தின் நோக்க வருதலின் அது கூடும். "இப்பவம் ஒழிந்த முற்பால் இயற்றினர் எண்ணலாம்" என்பதனானும் அதனை உணர்க.

* சித்தாந்தம் (சிவாகமம்) மாத்திரம் கற்றாலும் கேட்டல் முதலாயவற்றிற்கு அதிகாரிகள் ஆவார்கள்; *பரபக்கம் சுவபக்கம் இரண்டும் கூறும் வியாபக சாத்திரம் ஆதலின்.

சித்தாந்தத்தை முழுதுணர மாட்டார்க்குச் சிலதந்திரம். அதுவும் உணர மாட்டார்க்குச் சிவஞான போதம் முதலியவற்றால் முழுதுணர வரும்.

அதுவும் மாட்டார்க்குத் தமிழிற் சிவஞான போதம் சிவஞான சித்தியார் முதலானவற்றான் முழுதுணர வரும். அது,

* "ஆலம்வித் தென்ன வைச்ச
  தச்சிவ ஞான போதம்
மூலமாம் அதில் எழுந்த
  முளைசிவ ஞான சித்தி
மேல் எழு துளிர் விட்டாங்கு
  மேவிய இது மற்றெல்லாம்
சாலவும் விரியும் மேன்மேல்
  சற்குரு முகத்தி னின்றும்."

"வேதம் ஏன்? சாத்திரம் ஏன்?
  வேறுபல நூல்களும் ஏன்?
ஓதி முழுதும்
  உணர்வோர்க்குப்-போதத்
தவஞானம் பெற்ற
  சதாசிவர் தாம் சொன்ன
சிவஞான சித்தி
  தெரிந் தால்."

என்றன காண்க.

* முன்னதன் முன்னடியிரண்டும் அப்படியே இருப்பதும் பின்னடியிரண்டும்

'மேலவாந்தளிரும் மற்றும் விரிந்த ஞானந்த தீபம்

சாலவும் பலம் உயிர்க்குத் தரும் அரும் பத விவேகம்'

என வேறுபட்டிருப்பதும் எம் பார் வையில் வெளியிடப்பட்ட ஞானாவரண விளக்கம் தொடக்கத்திற் காண்க.

இப்பின்னடிப் பொருளை நோக்கின் விளங்கு வது ஞானாவரண விளக்கம் இவ்வாறு உணர்ந்த தனாற் பயன், சிரவணம் மநநம் நிதித்தியாசனம் பண்ணிப் பரசமய மெல்லாம் பூருவபக்கமாக ஞானந்தம் கூறுமாறே பதிபசுபாசத்தின் உண்மை அறிந்து சித்தாந்தமாக நிறுத்தல் ஆம்.

இப்பயன் தோன்றப், "பன்மார்க்கப் பொருள் பலவும் கீழாக மேலாம் பதிபசுபாசம் தெரிந்து" என அபரஞானப்பியாசம் முடிவளவும்கூறியது.

'பன்மார்க்கம்' என்றது முற்கூறிய எல்லாச் சமயங்களையும், அவற்றை ஞானாவரண மாபாடியத்தின் தொடக்கம் முதல் அறிய லாகும்.

ஞானசாதகர் அவசியம் சிரவணம் (கேட்டல்) முதலிய பண்ணியே வீடு அடைவர் என்பதை வற்புறுத்தியது. இவ்வளவும் அபரஞான வியல்பு கூறினர். அடுத்துப் பரஞானத்தியல்பு எழுதப்படும்.

உ

# "தமிழ் வளர்ந்தால் தமிழினம் வாழும்"

## நெல்லை மாவட்ட தி.மு.க. மாநாட்டில்

### பாவேந்தர் பாரதிதாசன் திருவுருவப் படத்தைத் திறந்துவைத்து

### தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் ஆற்றிய உரை



*மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களே!*

*நண்பர்களே!*

நெல்லை மாவட்ட திராவிட முன்னேற்றக் கழக ஐந்தாவது மாநாடு நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. கழக அரசியல் தலைவர்கள் கழகத்தைச் சார்ந்த அணியினருக்கு அரசியற் பணிகளைப் பற்றி எடுத்துரைப்பார்கள். கழகத்தின் அரசியலுக்கு அப்பாற்பட்ட மொழி வழியால், இனவழியால், கொள்கை-கோட்பாடுகளில் ஒற்றுமையுடைய-நட்புடைய நாமும் மாநாட்டில் கலந்து கொள்ள அழைக்கப்பட்டிருக்கின்றோம். ஏன்? சமுதாய வாழ்க்கையில் அரசியல் ஒருபகுதியே! திராவிட முன்னேற்றக் கழகத்தினரானாலும் சரி, வேறு எத்துறை அரசியற் கட்சியினரானாலும் சரி, வேறுபாடற்ற சில பொதுத்திட்டங்கள்-பொதுக் கொள்கைகளுண்டு; இருக்கவும் வேண்டும். கவிஞர்கள் வழியிலேதான் நமது பணி. புரட்சிக்கவிஞன் பாவேந்தன் பாரதிதாசன் கட்சி அரசியலுக்கு அப்பாற்பட்டு வகுத்துக் கொடுத்த திட்டங்களை கட்சி அரசியலுக்கு அப்பாற்பட்ட நிலையில் உள்ள நாம் எடுத்துக் கூறுவதற்கு வாய்ப்பு வழங்கிய மாநாட்டு வரவேற்புக் குழுவினருக்கு நன்றி; பாராட்டு.

ஓர் இனத்தின் அறிவு வளர்ச்சிக்கு, அவ்வினத்தின் தாய்மொழி வளர வேண்டும். அத் தாய்மொழியில் அந்த மக்கள் நல்ல அறிவைப் பெற வேண்டும். பாவேந்தன் இத் துறையில் அதிக அக்கறை காட்டினன். "தமிழ்நாட்டின் தெருக்களிலே தமிழ் இல்லையே!" என்று கவலைப்பட்டான்! தமிழ் நாட்டு மக்கள் நாலுபேர் கூடினுல் சமுதாய இயலை, அறிவியலை, பொருளியலைப் பற்றிச் 'சள சள' எனப் பேசிட வேண்டும் என்று அவன் எண்ணினன். அந்த எண்ணத்தை நிறைவேற்றிட நாம் அனைவரும் அரசியற்கட்சி வேறுபாடின்றி முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும். இன்று மக்களிடத்தில் ஆழமான அறிவு நாட்டமில்லை. கவர்ச்சிகளுக்கு ஆளாக்கப்பட்டிருக்கின்றனர். திரைப்படக் கொட்டகைகளிடத்திலேயே நாட்டை ஒப்படைப்புச் செய்து விடுவோம்போல இருக்கிறது. அன்பு

கூர்ந்து நல்ல தமிழ்நெறி நாட்டில் பரவ உரிய முயற்சிகளை மேற்கொள்ளுங்கள். தமிழ் வளர்ந்தால் தமிழன் வாழ்வான்; தமிழினம் நிலைத்து வாழும். அதனாலன்றோ,

“ தமிழுக்கும் அமுதென்று பேர்!-அந்தத்
தமிழ் இன்பத் தமிழ்எங்கள் உயிருக்குநேர் !
தமிழுக்கு நிலவென்று பேர் !—இன்பத்
தமிழ்எங்கள் சமுகத்தின் விளைவுக்குநீர்!”

என்று பாடினான்.

இந்திய நாட்டில் குறிப்பாகத் தமிழகத்தில் நிலவும் சாதி வேற்றுமை கொடுமைத் தன்மையுடையது. இந்தச் சாதிவேற்றுமையை ஒழிக்க நாம் தொடர்ந்து போராடினாலும் நம்மால் முடியாமல் தோல்வியே அடைந்துள்ளோம். இன்றைய நிலையில் சாதிமுறை, சாதி வேற்றுமை ஒழிக்கப்படக் கூடியவைதானா? என்பதே கேள்விக்குறியாகி விட்டது. இதற்கு விடை நம்முடைய நாடாளும் அமைச்சர்கள்தான் சொல்லவேண்டும். சாதி வேற்றுமையை ஒழிக்கும் பணியில் நாம் வெற்றி பெற்றாலும் சரி, தோல்வியே கண்டாலும் சரி அந்த வகையில் தொடர்ந்து முயற்சி செய்வது நம் ஒவ்வொருவருடைய கடமை பாவேந்தன் பாரதிதாசன் சாதிவேற்றுமை ஒழிப்பில் அதிக அக்கறை காட்டினான்; “ நமக்குரிய முதற்பணி சாதி ஒழித்தல் ” என்றான். வேறு எங்கு சாதி வேற்றுமை நிலவினாலும் சமுதாயத்தின் பொது ஒருமைப்பாட்டு நிறுவனமாக விளங்கும் திருக்கோயிலில் பிறப்பின் காரணமாக அமைந்துள்ள சாதி வேற்றுமை நிலவுதல் கூடாது. பாவேந்தன் திருக்கோயிலில் நிலவும் சாதி வேற்றுமையை சாதுர்யமாகச் சந்திக்கின்றான். “ திருக்கோயிலுக்குள் எழுந்தருளியிருக்கும் கடவுள் ஆற்றலுடையவன். அந்தக் கடவுளைப் பறையர் குலத்து ‘அமாவாசை’ தீண்டுகின்றான். அமாவாசை தீண்டுவதனால் கடவுளின் ஆற்றல் குறைந்து விடுகிறதென்றால் யாருடைய ஆற்றல் பெரிது? கடவுளின் ஆற்றலா? அமாவாசையின் ஆற்றலா?”-இது பாவேந்தன் கேள்வி. பாவேந்தன் புதிதாகக் கேட்கவில்லை. அவனுக்கு முன்னோடியாக வாழ்ந்த வள்ளற் பெருமானும் கேட்டார்.

“ ஆடும் கரியும் அணிலும் குரங்கும் அன்பு
தேடும் சிலம்பியொடு சிற்றெறும்பு-
[நீடுகின்ற
பாம்பும் சிவார்ச்சனைதான் பண்ணிய
[தென்றால்பூசை
ஓம்புவதற் கியார்தான் உவவாதார்?”

என்று வள்ளற் பெருமான் பாடுகின்றார். நாம் அனைவரும் இந்த நியாயமான பாவேந்தனின் திட்டத்தை நடைமுறைப்படுத்த வேண்டும்.

பாவேந்தன் அடுத்து முழங்குகின்றான். ஓடப்பரை ஒப்பப்பராக்க வேண்டும் என்கின்றான். எல்லோரும் எல்லாவற்றையும் பெற வேண்டும். இது பாவேந்தனின் இலட்சியக் கனவு. இந்தக் கனவை நனவாக்க நம்முடைய அரசும் முயற்சி செய்கிறது. ஏழைகளின் சிரிப்பில் இறைவனைக் காண்பது நமது அரசின் நெறிமுறை. நம்முடைய அமைச்சர்கள் இறைவனைக் காண்கிறார்கள். ஆனால், காணும் முறை வேறு. காணும் இடம் வேறு ஆனால் காணப்படுவது இறைவனையே என்பதை நாம் நல்லவர்களுக்கு நினைவூட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். ஏழைகளின் சிரிப்பில் இறைவனைக் காண்பது உயர்ந்த சமய நெறியே! நமது இறைவன்கூடத் திருக்கோயிலில் உண்ணாமலிருப்பது, உலகுயிர் அனைத்தும் உண்ணும் வரையில் தான் உண்ணக் கூடாது என்பதாலேயேயாம். பாவேந்தனும் ‘உலகுண்ண உண்!’ என்றான். இந்த நாட்டு மக்கள் அனைவரும் வாழத் திட்டங்களைத் தந்த பாவேந்தனின் திட்டங்களைச் செயற்படுத்துங்கள் என்று கேட்டுக்கொண்டு அவனுடைய திருவுருவத்தைத் திறந்து வைக்கின்றோம்.

[தொகுத்து எழுதியது: மரு. பரமகுரு]

# எங்கே செல்வாய் இறைவா?

டாக்டர். சுப. அண்ணுமலை, எம்.ஏ., எம். லிட்., பிஎச். டி.

மாணிக்க வாசக அடிகள் 'சீவன் முத்தி' பெற்ற நிலையில் பாடிய பதிகங்களுள் ஒன்று 'பிடித்த பத்து'. உடலில் இருந்து வாழும் போதே பாசம் முதலிய மலங்களிலிருந்து விடுபட்டு, மெய்யறிவுடன் விளங்குதல் சீவன் முத்தி யாகும்.

இந்நிலையில், முன்பு போலன்றி, இறைவனிடத்திலே என்றும் எப்போதும் தோய்ந்து நின்ருர் அடிகள். ஊன் உருகி, உள்ளொளி பெருகப் பெற்று, அழியா ஆனந்தம் பெற்ருர். ஆதலால், இறைவனைச் சிக்கெனப் பற்றிக் கொண்டதாக இப்பதிகத்திற் கூறுகிருர்.

முன்பு இறைவன் காட்சி வழங்கி மறைந்தான். அடிகள் அழுதார்; துடித்தார். இறைவன் வாராமலே 'புலர்ந்துபோன காலங்கள்; புகுந்து நின்றது இடர் பின்னுள்'.

இப்பொழுதோ, இறைவன் அருளால், அவரைப் பற்றிக்கொண்டிருந்த மலங்கள் அகன்றன. இறையனுபவம் தொடர்ச்சியாக வாய்த்தது, "இறைவா, இனி என்னை விட்டு நீ எங்கே செல்வாய், பார்க்கலாம்" என்று உரிமையோடு பேசுகிருர் அடிகள். முன்பு பெற்று, இழந்த ஆதுரமும் இதில் புலப்படுகின்றது

இறைவன் தலைவன். உலகத்திற்கு மட்டுமா? இது போன்ற எத்தனையோ உலகங்களின் தலைவர்கள் ஆகிய தேவர்களுக்குத் தலைவன். அவர்களாலும் அறிய இயலாதவன் எட்ட முடியாத இறைவன் கிட்ட வந்து தமக்கு ஆனந்த அனுபவம் தந்தது. அவனது பேரருட் பெருங்கருணையால் என்கிருர் அடிகள்.

கடந்த பொருளாய்-பரம்பொருளாய்-நிற்கும் இறைவன், உயிர்களிடம் பொதுவாய் வைத்த கருணையால், அவை வாழ உலகும் உடலும் கொடுத்துள்ளான். அவை இயங்கவேண்டுமே? தானே அவற்றில் 'ஒன்ருய்க்' கலந்து, இயக்குகின்ருன். "வானுகி, மண்ணுகி, வளியாகி, ஒளியாகி" விளங்குகின்ருன். இது அண்டத்தில் இனிப் பிண்டத்தில் "கூறும் நாவே முதலாகக் கூறும் கரணம் எல்லாம் ஆக" இருக்கின்ருன். இனி அனுபவத்தில் 'தீமை நன்மை முழுதுமாக' விளங்குகின்ருன். இம்மட்டோ? உயிர் அறியும் பொருள். ஆனுல், தானே அறியாது; அறிவித்தால் அறியும். இறைவன் உயிருக்கும் உள் இருந்து அறிவிக்கின்ருன். இவ்வாறு உலகில் உயிர்களின் வாழ்வு நடைபெறுவதற்கு, உடல், உலகம், உயிர் என்ற மூன்றிலும் அவன் கலந்து நிற்கின்ருன்.

தேவராலும், யாவராலும் அறியக் கூடாதவனுய்-'வேருய்'-நிற்றல் அரிய செயல் என்ருல் தன் தன்மை தோன்ருதவாறு, யாவற்றிலும், எங்கும் நீக்கமறக் கலந்து நிற்பது அதைவிட அரிய செயல் ஆகும்.

இறைவனின் நிலை எங்கே? மலங்களால் அலைக்கழிக்கப்பட்டுத் தடுமாறும் தம் நிலை எங்கே? தமக்கு அவன் அருள் புரிந்து, ஆனந்த அனுபவம் தந்தது என்னே! என்று வியக்கின்ருர் அடிகள்.

அவர் தம் குடிமைக்கு ஏற்பச் செய்த செயல்கள் யாவும் கரும பலனைத் தரும் செயல்கள் ஆகாமல், இறை பணியாய் நிகருமாறு செய்வித்தான். இறைவன் இம்மட்டோ?

விழிப்பு, தூக்கம், கனவு என்ற மூன்று உணர்வுமே (mundane consciousness) மாறி மா றிவர, இவற்ருல் வாழ்ந்த உலகியல் வாழ்வு, இனி அடிகளுக்கு இல்லை. இவற்றை விட மேலான, "துயில் இல்லா நிலை"- துரியஉணர்வு (Trancendental consciousness) அவரிடம் நிலை கொண்டது. அதைக் கொண்டு தம்மையும், தம்மை உடையவனுகிய இறைவனையும், அவன் அறிவிக்க, உணர்ந்து ஆனந்தம் பெறுகின்ருர். முன்னை வாழ்வு நோய்; இன்றை வாழ்வே வாழ்வு; நல்வாழ்வு. நோய் நீக்கி நலம் தந்த இறைவன் மருந்தே அன்ருே?

அடிகளுக்கு மட்டுமன்றி, செம்பொருளை ஆய்பவர் எவருக்கும், முடிவான பொருளாக உள்ளவன்-'சத்' ஆக உள்ளவன் 'சித்' வடிவாகிய சிவபெருமானே ஆவான். குணமிலியாகிய (attributeless) அவனைப் பிடிப்பது எவ்வாறு என நாம் தடுமாறுவோம் ஆதலால், நம் மீது கொண்ட கருணையால், அவன் அருள் உருவமாக-திருவடியுடன் விளங்குகின்ருன். வீடு பேறு தரும் அந்தத் திருவடியே செல்வம். மாணிக்க வாசக அடிகள், தமக்காக மட்டும் அன்றி, நமக்காகவும்-நாம் அறிவு பெற்று உய்யும்பொருட்டும்-அந்தச் செல்வத் திருவடிகளைப் பிடித்துக் கொண்டு பாடுகின்ருர்:

" உம்பர் கட்கு அரசே, ஒழிவு அற நிறைந்த
யோகமே, ஊற்றையேன் தனக்கு
வம்பு எனப் பழுத்து, என் குடி முழுது ஆண்டு
வாழ்வு அற, வாழ்வித்த மருந்தே,
செம்பொருள்-துணிவே, சீர் உடைக் கழலே,
செல்வமே, சிவபெருமானே,
எம்பொருட்டு உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கு எழுந்தருளுவது இனியே?

—திருவாசகம்: பிடித்த பத்து: முதற்பா.

[உம்பர்கள்-தேவர்கள்; ஊற்றை-அழுக்கு; வம்பு-புதுமை; கழல்-திருவடி.]

# தோத்திரப்பா விளக்கம்

அக்னிஹோத்ரம் ராமானுஜ தாதாசாரியார்

## உயர்வற உயர்நலம் உடையவன்

உயர்வற வுயர்நல முடையவன் யவனவன்
மயர்வற மதிநல மருளினன் யவனவன்
அயர்வறு மமரர்க ளதிபதி யவனவன்
துயரறு சுடரடி தொழுதெழென் மனனே.

ஆழ்வார்களுள் தலைமையாக விளங்கும் நம்மாழ்வார் எம்பெருமானது பெருமையை விளக்கி அவனைத் தொழுதெழுத்தம் மனதிற்கு அறிவுறுத்துகின்றார்.

எம்பெருமானை நடுநாயகமாகக் கொண்ட ஆயிரம் பாசுரங்களில் இது முதலாவதாகும். ஆழ்வார் தன்னுடைய பாசுரங்களில் தன்னுடைய இன்கவிகளால் கடவுளை வாழ்த்தி, வணங்கி வழிபடுகிறார். தம் உள்ளத்தால் எம்பெருமானின் சொரூபம், திருமேனி, குணங்கள், பெருமை இவைகளைக் கண்டு களித்து தான் பெற்ற பேறு இவ்வையகம் பெற இன்கவிகளால் தமது அனுபவத்தை வெளியிடுகிறார்.

முதல் பதிகம் நம்மாழ்வாரின் கடவுள் கருத்திற்குக் கருவூலமாக அமைந்துள்ளது. இங்கு பொதுவான கடவுளின் இலக்கணத்தை அடிப்படையாகக்கொண்டு பேசினாலும், திருமாலையே மனதில் கொண்டு பேசுகிறார் என்பது குறித்துக் கொள்ளத்தக்கது.

முதல் பாடலில் எம்பெருமானுடைய பெருமையை விளக்கிப் பேசுகிறார். மூன்றடிகள் எம்பெருமானின் பெருமையை விளக்குவதாக அமைந்துள்ளன.

உயர்வற வுயர்நலம் உடையவன்:—எம்பெருமானின் உயர்நலமுடைமை இங்குக் குறிப்பிடப் படுகிறது. நலம் என்ற சொல் பல இடங்களில் பல பொருள்களில் ஆழ்வாரால் ஈடுபடுத்தப் பட்டுள்ளது. இங்கு எம்பெருமான் உயர்ந்த நலத்தை உடையவன் என்று சொல்லப் படுகிறது. 'நலம்' என்ற சொல் இங்கு எம்பெருமானுக்குள்ள நற்குணங்களைக் குறிப்பிடுகிறது. உலகத்திற்கு நன்மையைச் செய்யக்கூடிய எல்லாக் குணங்களும் அவனிடம் இருந்து வருகின்றன. கடவுள் நற்குணங்களின் கடலாகும். குணங்களால் எம்பெருமானுக்கு ஏற்றம். ஆன்மவர்களும் எம்பெருமானின் குணங்களால்தான் பயன் பெறுகிறார்கள். குணங்களில்லாத கடவுள் நம் வழிபாட்டிற்குச் செவி சாய்க்க மாட்டான். தூய்மை நிறைந்த கடவுளிடத்தில் நற்குணங்களையே காண முடியும். தீயகுணங்கள் நெருங்க இடமேயில்லை. எம்பெருமானின் குணங்கள் அவனின் மேன்மையும், எளிமையும் விளக்குகின்றன. மேன்மை இல்லாமல் போனால் எம்பெருமானை யாரும் மதிக்க மாட்டார்கள். மேன்மை மட்டும் இருப்பது போதாது. எளிமையிருந்தால்தான் ஆன்மவர்க்கம் அவனை அணுக முடியும். இருவகையான அவனுடைய குணங்கள் உயர்வற உயர்ந்தவை. உலகத்திற்கு உதவுவது; அடியார்களுக்கு உதவுவது. இவை மூலம் குணங்கள் நிறம்பெறுகின்றன. உயர்ந்த குணங்களால் உயர்ந்துள்ள எம்பெருமானுக்கு மேலாக யாரும் இல்லை. அனைவருக்கும் மேம்பட்டவன், நலம் நிறைந்த எம்பெருமானை நாட வேண்டும். நலம் என்ற சொல் மகிழ்ச்சியைப் பொருளாகக் கொண்டு ஆனந்தத்தை மட்டும் குறிப்பிட்டாலும் உயர்வற உயர்ந்த ஆனந்தத்தை உடையவன் என்று பொருளாகும். அளவற்ற ஆனந்தத்தை உடையவனை வணங்கி வழிபட்டால் நாமும் ஆனந்தத்தை அடையலாம்.

மயர்வற மதிநலம் அருளினன்:—இங்கு ஆழ்வார் மயக்கம் இல்லாத மதிநலத்தை அருளியதைக் குறிப்பிடுகிறுர். பகவான் உலகத் திற்கும் நலத்தை அருளினுன். ஆழ்வாருக்கும் நலத்தை அருளினுன். மனித வாழ்க்கையில் மனமே அடிப்படையாக நிற்கிறது. வாழ்விற்கும் விடுதலைக்கும் மனமே மூலகாரணம். ஒருவிதக் குறைபாடும் இன்றி மனம் இருந்து வருதல் வேண்டும். மனம் இயங்குவது எம்பெருமானின் கைகளிலிருப்பதால் தனக்குக் கொடுத்த மதி நலத்தைப் புகழ்ந்து பேசுகிறுர். மதிநலத்தை எம்பெருமான் கொடுத்தால்தான் பல வழி களும் அவனைத் தன் உள்ளத்தால் பார்க்க முடிகிறது.

அன்புடன் தருவதை அருளினதாகக் கூறுகிறேம். தமக்கு எம்பெருமான் மதி நலத்தை உவந்து அருளினுன் என்று கூறுகிறுர். அருளினுன் என்ற சொல் அன்போடு செய்யும் காரியத்தைக் குறிப்பிடும். நன்மை மிக்க மதி இல்லாவிடில் வாழ்க்கையே கிடையாது. கடவுள் தந்த மதியைக் கொண்டே கடவுளைப் பார்க்க முடியும். இஃது எம்பெருமானுடைய சிறப்பை வெளியிடுகிறது.

அயர்வறும் அமரர்கள் அதிபதி:—அவன் அமரர்கள் அதிபதி. அமரர் என்ற சொல் எம்பெருமானேடு எப்பொழுதும் ஸ்ரீவைகுண்டத்தில் கூட இருந்து பணிவிடைகளைச் செய்து வரும் நித்திய சூரிகளைக் குறிப்பிடும். மறதியின்றி, சோர்வின்றி, அவர்கள் எப்பொழுதுமே எம்பெருமானை அனுபவித்து, பணிசெய்து வருகிறுர்கள். அவர்களுக்குப் பிறப்பு, இறப்பு கிடையாது. அவர்களுக்கு அதிபதியாய் இருப்பது எம்பெருமானுக்கு ஒரு பெருமை. எம்பெருமான்போல் இவர்கள் நித்தியர்கள்.

இவ்விதம் எம்பெருமானுடைய பெருமையை விளக்கி விட்டு, அவருடைய திருவடியைத் தொழ மனதை ஏவுகிறுர். திருவடிகளின் பெருமையை "துயரறு", "சுடரடி" என்ற சொற்களால் விளக்குகிறுர். உலகத்தில் பிறந்து, இறந்து, வாழ்ந்து, துயரத்தை அடைந்துள்ள ஆன்ம வர்க்கத்திற்கு எம்பெருமானின் திருவடிகள் துயர் தீர்ப்பவைகளாய் இருக்கின்றன. ஆனந்த மயமான எம்பெருமானின் திருவடியும் ஆனந்த மயம். அதை அண்டினுல் துயர் நீங்கி ஆனந்தத்தை அடையலாம். எம்பெருமானிடத்தில் ஈடுபட திருவடிகள் ஒரு துறை. திருவடி சுடரால் மிகுந்தது. ஒளி வடிவு, இது தெய்வீக ஒளி. கட்டுக்கடங்காத ஒளி. இதனெதிரில் மற்ற ஒளிகள் நிற்கா. அறிவே உண்மையான ஒளி. அறிவு சொருபத்திலுள்ள எம்பெருமான் திருவடிகளைத் தொழுவதால் அஞ்ஞானமாகிற இருட்டு நீங்கும். அடியார்கள், தங்களுக்கு நன்மை பயக்கும் திருவடியையே கணிக்கிறுர்கள்.

திருவடியைத் தொழச் சொல்லுகிறுர். தொழுது எழச் சொல்கிறுர். தொழுகை எம்பெருமானேடு தொடர்பை உண்டுபண்ணுவது. இங்கு மனதால் வணங்குவது குறிப்பிடப் படுகிறது. மனதால் வணங்கி அவன் பெருமையை உணர்ந்து, தனது தாழ்மையை உணர்வது தான் தொழுகை. செயலற்று, தரையோடு தரையாகக் கிடந்த ஆன்மா கடவுளைத் தொழுவதால் எழுச்சி அடைகிறுன். இது கடவுளை அடைய ஏற்பட்ட எழுச்சி.

தம்முடைய மனதை 'என் மனன்' என்று கூறி உறவு கொண்டாடுகிறுர். உலக வாழ்க்கையில் சென்று கொண்டிருந்த மனது, திரும்பி எம்பெருமானைத் தொழுதவுடன் இவரோடு உறவுள்ளதாகிறது. அத்துடன், உறவை ஏற்படுத்திக் கொள்ள ஆழ்வார் ஆசைப் படுகிறுர்.

ஒவ்வொரு அடியிலும் கூறப்படும் எம்பெருமானின் பெருமை தனிச் சிறப்பு வாய்ந்தவை. 'அதனுலேயே ஒவ்வொரு அடியிலும் 'யவனவன்' எனக் கூறுகிறுர். 'யாவன்' என்பது 'எவன்' என்று குறுகியது செய்யுள் நோக்கி. 'அவன்' என்ற சொல் கடவுளின் உலகப் பிரசித்தமான நிலையைக் குறிப்பிடுகிறது.

'யவன்' உயர்வற உயர்நலமுடையனும், மயர்வற மதிநலம் அருளினவனும், அயர்வறு அமரர்கள் அதிபதியாயும் உள்ளானே; அவனது துயரை அறுக்கக் கூடிய 'சுடரடி'யைத் தொழுது எழ ஆழ்வார் உபதேசிக்கிறுர். நாமும் அவ்விதமே நமது மனதிற்கு உபதேசம் செய்வோமாக!

௨

# "சூடிக் கொடுத்த சுடர்க்கொடி"

புலவர் த. கோடப்பிள்ளை, எம்.ஏ.,

## காட்சி 2

இடம் : தெரு
நேரம் : மாலை நேரம்
உறுப்பினர் : ரெங்கன், நம்பி

ரெங்கன் : திருமாலே ! திருவில்லிப்புத்தூர் வடபெருங்கோயிலுடையானே ! உனக்குப் பூந்தோட்ட வேலை செய்து கொண்டிருந்த இந்தக் கை இப்போ குழந்தை வளர்க்க சிறிய பாயைத் தூக்குகிறது.

நம்பி : ரெங்கா !

ரெங்கன் : வா நம்பி ! நீ என்ன வாங்கி வருகிறே?

நம்பி : நீ என்ன வாங்கி வருகிறே?

ரெங்கன் : சந்தையிலே போய்ப் பாய் வாங்கி வருகிறேன். நீ?

நம்பி : பாலாடையும், சங்கும் வாங்கி வருகிறேன். உம்... நம்மை ஆண்டவன் இப்படியும் படைத்திருக்கிறான் !

ரெங்கன் : உம்... உம்... போ... போ... அங்கே குழந்தை அழப்போகிறது.

நம்பி : ஆமா, வா, வா.

## காட்சி 3

இடம் : பூந்தோட்டம்
நேரம் : பகற்போது

[பெரியாழ்வார் குழந்தையைக் கையில் வைத்துக்கொண்டு ஆரிரரோ......தாலாட்டுப் பாடுகிறார்]

கடலும் மலையும் அந்தக் கண்ணன் அல்லவா?
காற்றும் ஒளியும் அந்த மன்னன் அல்லவா ?
முடிவும் முதலும் அவன் எண்ணம் அல்லவா ?
மூத்த பெருமை அவன் தந்த தல்லவா ?

மண்ணை உணவாக்கி உண்டவன் கதைகேட்டு
மாந்தருள்ளம் அங்கே மயங்கி விடும்
மண்ணில் உனைமகளாய் எனக்கு வைத்தான்
மாணிக்கமே ! மணியே ! கண்ணுறங்கு !

கண்ணிலுன்னைப் பாவையெனக் காண வைத்தான்
காணாத பொழுது என்னைக் கலங்க வைத்தான்
விண்ணிருந்து வந்தவளே ! வீணையிசையே !
வேதமாய்த் தமிழ்முழங்கக் கண்ணுறங்கு !

பாசத்தில் பின்னிவிடப் பரமன் தந்தான்
பாங்காக உனைவளர்க்க வளமை தந்தான் ;
நேசத்தின் கரத்தாலே தொட்டிலிட்டேன் ;
நீர்வளர் தாமரையே கண்ணுறங்கு.

## காட்சி 4

இடம் : தோட்டத்தின் ஒரு பக்கம்

நேரம் : காலைப்போது

உறுப்பினர் : ரெங்கன், நம்பி, கோதை

ரெங்கன் : நம்பி! நம்பி! எங்கேடா தொலைந்தே! நம்பி! நம்பி! உன்னை நான் நம்பி, நாசமாய்ப் போனேன் நம்பி!

நம்பி : இதோ வந்தேன்'டா ரெங்கா! ரெங்கா! ரெங்கா!

ரெங்கன் : இதோ நம்பி! இந்த மாதிரி என்னைக் கூப்பிடக் கூடாது என்று எத்தனை நாள் சொல்லியிருக்கிறேன்!

நம்பி : எப்படி?

ரெங்கன் : ரெங்கா! ரெங்கா! என்ன இப்படி கூப்பிடறது. நான் என்ன கிளியா இல்லே...

நம்பி : இல்லே

ரெங்கன் : ஊரிலே இருக்கிறவன் என்ன நினைக்கிறான், கிளியைப் பார்த்து ரெங்கா! ரெங்கா! சொல்லு பார்ப்போம் ரெங்கா! ரெங்கா! இப்படி என்றால்தான் தேவலையே, கோவிலுக்குப் போகிறவனெல்லாம் வாழைப் பழத்தைக் கையில் எடுத்து நீட்டிக்கிட்டு மரத்திலே இருக்கிறதல்ல, அதைப் பார்த்து ரெங்கா! ரெங்கா! அப்படில்ல கூப்பிடுகிறான்

நம்பி : எப்படி?

ரெங்கன் : ரெங்கா! ரெங்கா!

நம்பி : [சிரித்து] ஓகோ...... எல்லோரும் அப்படி உயரத்திலே இருக்கிறதைப் பார்த்துக் கூப்பிடறதைப் போல உன்னையும் கூப்பிடுகிறார்களே என்று நினைக்கிறீயா.

ரெங்கன் : நினைக்கிறது என்னடா? கூப்பிடுறானுங்களே!

நம்பி : சரி, சரி, நீ எதற்கு என்னை அவ்வளவு அவசரமாகக் கூப்பிட்டே?

ரெங்கன் : தெரியலியா எதற்குக் கூப்பிட்டேன் என்று. பூ பறித்தாயா? எங்கே குடலையிலே எவ்வளவு இருக்கிறது? முன்னே மாதிரி இருந்தாத்தான் தேவலாமே. ஒரு அஞ்சு ஆறு ஆண்டுகளுக்கு முன்னாலே நாம எப்படி இருந்தோம். நாம உண்டு, நம சுவாமி உண்டு. இப்போ என்னடான்னா நம்மை ஆட்டிப்படைக்கிறதுக்குத் தான் கோதைன்னு ஒருத்தி இருக்காளேடா! 'பூ பறித்தாச்சா? எவ்வளவு பறித்தேள்?' அப்படி என்று கேள்வி மேலே கேள்வி கேட்டுக் கொண்டு அல்லவா வந்து விடுது!

நம்பி : முன்னே, குருவும், நாமும்தான் மாலைதொடுத்தோம். இப்போ கோதையும் சேர்ந்துட்டா.

[கோதை வருகிறாள்]

கோதை : ரெங்கா! ரெங்கா! நம்பி! நம்பி!

ரெங்கன் : அதோ வந்துட்டாடா!

நம்பி : ஆமா, ஆமாம்...வாம்மா கோதை! கோதை!

கோதை : என்ன பூ பறித்தேளா இல்லையா?

ரெங்கன் : பறிச்சுண்டிருக்கோம், இதோ வந்துட்டோம்.

கோதை : எத்தனை நேரம்! சீக்கிரம் வாங்கோ...பூவெல்லாம் மாலையா தொடுத்து அப்பா கிட்டே கொடுத்துட்டு நான் விளையாடப் போக வேண்டாமோ?

நம்பி : இதோ விரைவிலே வந்துடறேம்மா! (தொடரும்)

# அகப்பூசை

அங்கிங்கு எனுதபடி எங்கும் இறைவன் நிறைந்து விளங்குகின்ருன் என்பது நம் சமயச் சான்ரேர்கள் உணர்ந்த முடிபாகும். அங்ஙனம் விளங்கும் இறைவனை உணர்ந்து வழிபட்டுப் பேரின்பம் எய்துவதே பிறவிப் பயனுகுமென அவர்கள் காட்டியுள்ளார்கள். எங்கும் நிறைந்த இறைவன் மக்கள்தம் புறக்கண்ணுல் கண்டு கொள்ளுமாறு இல்லாமல் விறகில் விளங்கும் தீயைப் போலவும், பாலில் உறையும் நெய்யைப் போலவும் மறைந்து விளங்குகின்ருன். கடைதல் என்னும் முயற்சியினை மேற்கொள்ளும் போது விறகிலிருந்து தீயும், பாலிலிருந்து நெய்யும் வெளிப்படுகின்றன. அவ்வாறே உரிய முறையில் முயன்ருல்–கடைந்தால்–இறைவனும் வெளிப்பட்டருள்வான் என்னும் உண்மையை அப்பரடிகள்,

“விறகில் தீயினன் பாலிற் படுநெய் போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவுகோல் நட்டு உணர்வு கயிற்றினுல்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே”

என்று அழகுபடக் கூறியுள்ளார். கடைய இறைவன் முன்னிற்பான் எனக் கூறப்பட்டாலும் கடையும் முயற்சி-இறைவனைக் காண முயலும் முயற்சி-எல்லா மக்கட்கும் ஒரே இயல்பில் அமைவது அரிது. அம்முயற்சி எளிதாகக் கைவரப்பெற்றவர்கள் எங்கும், எதிலும் இறைவனைக் கண்டு இறைஞ்சி இன்பநிலை எய்திவிடுவர். “பார்க்கின்ற மலரூடு நீயே இருத்தி அப்பனி மலர் எடுக்க மனமும் நண்ணேன்” என்பது அவ்வாறு இறைவனைக் கண்டு கொண்டவரின் அனுபவ வாக்கு.

அறிவு நிலையிலும் உணர்வு நிலையிலும் பல்வகையாக வேறுபட்டு விளங்கும் மக்கள் அனைவரும், இறைவனை அறிந்துணர்ந்து பயன்கொள்ள ஒரே வழியினை அமைப்பது ஏற்புடையதாகாது. அதனுல் அறிவாலும் உணர்வாலும் பல்வகையில் வேறுபட்ட மக்கள் பலரும், தங்களுக்குப் பொருந்தும் வழியினை மேற்கொண்டு பயன்பெறும் வகையில், நான்கு வழிகளைச் (மார்க்கம்) சைவசமயம் வகுத்துக் காட்டியுள்ளது. அவற்றைச் சரியை, கிரியை, யோகம், ஞானம் எனச் சைவசாத்திரங்கள் வகுத்துரைக்கின்றன. இவை, தொண்டு நெறி (தாச மார்க்கம்) மகன்மை நெறி (சற்புத்திர மார்க்கம்), தோழமை நெறி (சகமார்க்கம்) அன்புநெறி (சன்மார்க்கம்) என்று கூறப்படும்.

ஸ்ரீ. அ. மா. பரிமணம், எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,

இவை நான்கும் ஒன்றின் ஒன்று உயர்ந்து நிற்கும் படிகளாக அமைந்து, பயன் தரவல்லன. இவற்றில் தனி ஒரு நெறி நின்றும், படிப்படியாக ஒன்றிலிருந்து மற்ரென்றிற்கு உயர்ந்து சென்றும் இன்பம எய்தல் கூடும். இந்நெறிகளின் சிறப்பினையும் அவற்ருல் மக்கள் எய்துவதற்கான பயனையும் நன்குணர்ந்த தாயுமானவ அடிகள், அரும்பு முதல் கனி வரை அமையும் பருவப் பொருள்களை உவமையாக்கி,

“விரும்பும் சரியை முதல்
மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்புமலர் காய்கனி போல்
அன்ருே பராபரமே”

என்று கூறியிருப்பது நினைந்து நினைந்து இன்புறத்தக்கதொன்ருகும்.

தெய்வத்தை உடன்படாத சமணம் முதலிய புறச்சமயங்களை எதிர்க்கும் வகையில், நாயன்மார்களும், ஆழ்வார்களும் தமிழகத்தில் உருவாக்கிய பக்தி இயக்கம் சரியை, கிரியை நெறிகளின் அடிப்படையில் அமைந்ததாகும். பக்தி இயக்கத்திற்குத் தெய்வ வழிபாடு உயிராக விளங்கியது. அதனுல் தேவார ஆசிரியர்கள் ஆங்காங்குள்ள தலங்கட்கு அடியார் குழாத்துடன் சென்று, தெய்வ ஒண்தீந்தமிழில் பதிகங்கள் பாடிப் பக்திப்பயிர் வளர்ப்பதைத் தம் கடமையாகக் கொண்டனர். வழிபடுங்கால், மக்களின் மனத்தரத்திற்கு (பக்குவம்) ஏற்ற வகையில் வழிபடுவதற்கு வாய்ப்பாகத் தெய்வத் திருமேனியைக் கொள்ளும் முறையிலும் பல நிலைகளைச் சைவசமயம் கொண்டுள்ளது. அருவம் (உருவமற்றநிலை), உருவம், அருவுருவம் என்று அவை பெயர் பெறும். வடிவமற்று விளங்கும் பரம்பொருளை அதே நிலையில் உணர்ந்து வழிபடும் அருவ வழிபாடு, ஞானியர்க்கல்லது மற்றையோர்க்கு ஆகாது. உருவத் திருமேனி அமைத்து வழிபடுவது அறிவு நிலையில் மிகவும் எளியவர்களாக இருப்பவர்கட்கு ஏற்றதாகும். இரு சாராரையும் இணைக்கும் வகையிலும், யாவர்க்கும் பொதுவாக அமையும் வகையிலும் அருவுருவத் திருமேனியை அமைத்துக் காட்டியிருப்பது சைவத்தின் தனிச் சிறப்பாகும். இலிங்க வடிவம் அருவுருவத் திருமேனியாகும். இவ்வுரு, கை கால் முதலிய உறுப்புக்கள் இன்மையால் அருவமாகவும், நடுதறி போல்வதோர் தோற்றமுண்மையால் உருவமாகவும் விளங்க இரண்டுருவும் இயைந்த அருவுருவத் திருமேனியாக் கொள்ளப்படுகின்றது. காணும் உருவ நிலையிலும், காணுத அருவ நிலையிலும் விளங்கும் சிவபெருமான் இயல்பினை உணர்த்தும் குறியே இந்த இலிங்கத் திருமேனி என்பதைச் சேக்கிழார், “காணுத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய் நீணுகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்” என்று குறிப்பிடுகின்ருர். தமிழகச் சிவாலயங்களின் கருவறைகளில் விளங்கும்

தெய்வத் திருமேனிகள் அனைத்தும் (மூலவர்) அருவுருவத் திருமேனியாகிய சிவலிங்க வடிவமாகவே அமைக்கப்பட்டுள்ளன. ஆனால், அவ்வாலயங்களினின்றும் புறம் போந்து திருவுலாக் கொள்ள அமைந்த திருமேனிகள் அனைத்தும் (உற்சவர்) உருவத்திருமேனிகளாக அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

திருக்கோயில்களில், ஆகம முறைப்படி அமைக்கப்பட்டுள்ள திருமேனிகளைத் தெய்வமாகவே கருதி, பூவும் நீரும் முதலாயின இட்டு போற்றி உரைத்து வழிபாடு செய்வது சரியை, கிரியை நெறி நிற்கும் பக்தர்கட்கு உரியதாகும். "திருக்கோயில் உள்ளிருக்கும் திருமேனி தன்னைச் சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவன் ஆங்கே" என்பது சிவஞான சித்தியார் வாக்கு. இறைவன் திருமேனிகளைப் புறக்கண்ணாற் கண்டு, வழிபாடு செய்துகொள்ளும், புறப்பூசையினை நாயன்மார்களிற் பலர் மேற்கொண்டு வாழ்ந்தனர். தேவார ஆசிரியர்களின் வாழ்வும், வாக்கும் இப்பூசையினைப் பெரிதும் வலியுறுத்துவனவாக அமைந்து ஏனைய மக்கட்கு வழிகாட்டியாகவுள்ளன.

ஆகமங்கள் விரிவாகக் கூறும் இப்பூசை முறைகளைச் சுருக்கமும் எளிமையும் உடையதாக அமைத்து அதனை யாவரும் எளிதிற் பின்பற்றிப் பயன்கொள்ளுமாறு விளக்கிக் காட்டியுள்ளார்கள் சைவ சமய குரவர்கள். இறைவனை வழிபட்டுக் கொள்ள எங்கும் எளிதிற் கிடைக்கும் பூவும் நீரும் போதுமானதாகும். பூக்கள் இல்லாவிடில் போதுகளும், அவையும் இல்லாதவிடத்துப் பச்சிலையும், அதுவும் கிடைக்காவிடத்துத்தன் நெஞ்சமும் அமையும் என்று, கூறி இதனை,

" போதும் பெறுவிடிற் பச்சிலை உண்டு
புனல்உண்டு எங்கும்
ஏதும் பெறுவிடின் நெஞ்சுண் டன்றே
இணையாகச் செப்பும்
சூதும் பெறுமுலை பங்கர்தென்
தோணி புரேசர் வண்டின்
தாதும் பெறுத அடித்தாமரை
சென்று சார்வதற்கே"

எனப் பட்டினத்தடிகள் கூறுகின்றார். இவ்வழிபாட்டிற்கு உள்ளமும், உரையும், உடலும் ஆகிய முக்கருவிகளும் ஒன்றுபட்டிருப்பது இன்றியமையாததாகும்.

இதனை அப்பரடிகள்,

' கற்றுக் கொள்வன வாயுள நாவுள
இட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ்சடையான்உளன் நாமுளோம்
எற்றுக்கோ நமனால்முனி வுண்பதே'

என்னும் தனிக்குறுந்தொகையில் விளக்குகின்றார்.

குணங்குறியற்று விளங்கும் பரம்பொருளை ஞான நிலையில், ஞான வடிவில் வணங்கும் பெருந்தகுதி அடைந்தவர்கள் சிலரே யாவர். ஞான மயமாக விளங்கும் இறைவனை ஞானத்தால் உணர்ந்து வழிபடும் நிலைக்கு முதற்படியாக, புறத்திலே அமைத்து வழிபடும் திருமேனி வழிபாட்டினைப்போல, அகத்திலே இறைவன் திருமேனியை உருவாக்கி வழிபடுவது தக்க சாதனமாகும். புறத்திலே எடுக்கப்படும் ஆலயம் முதலிய அனைத்தையும் அகத்தில் அமைத்து வழிபடுவது அகப்பூசை (அகவழிபாடு) எனப்படும். 'ஞானத்தில் ஞானம்' எனச் சைவசாத்திரங்கூறும் மிகவுயர்ந்த சமய நிலையெய்திய அப்பரடிகள், எல்லா . மக்களும் எளிதின் பிற்பற்றற்காவதாகும். சரியை, கிரியை அடங்கிய தொண்டு நெறியினை மேற்கொண்டு வாழ்ந்தாராயினும், ஞானத்தால் வழிபடும் அகப்பூசை நெறியினையும் கொண்டிருந்தார் என்பதனை,

'ஞானத் தால்தொழு வார்சில ஞானிகள்
ஞானத் தால்தொழு வேனுனை நானலேன்
ஞானத் தால்தொழு வார்கள் தொழக்கண்டு
ஞானத் தாயுனை நானும் தொழுவனே'

என்ற குறுந்தொகையிற் காட்டியுள்ளார்.

புறத்தே செய்யும் பூசைக்குத் திருக்கோயிலும், ஆண்டவன் திருமேனியும் பிறவும் வேண்டியிருப்பதுபோல அகப்பூசைக்கும் அவையனைத்தும் தேவையாக உள்ளன. திருக்கோயில்கள், அண்டத்தினைப் பிரதிபலித்து நிற்கும் பிண்டத்தின் (மனித உடல்) அடிப்படையில் அமைந்தனவாகும் என்பது சிவாகமங்களின் துணிபு. 'மானுடர் ஆக்கை வடிவு சிவலிங்கம்' எனத் திருமூலர் திருவாய் மொழிந்துள்ளார். அதனால் அகப்பூசை செய்வார்க்குத் தாம் பெற்றுள்ள உடம்பே திருக்கோயிலாகும் என்னும் உணர்வு இன்றியமையாததாக உள்ளது. இந்த உண்மையினைச் சைவ சாத்திர தோத்திர நூல்கள் தெளிவாக விளக்கியுள்ளன.

தேவார ஆசிரியர்கட்குக் காலத்தால் முந்தியவராகப் பொதுவாகக் கருதப்படும் திருமூலர், ஞான நெறியினை விளக்குகின்றபோது மானிட யாக்கை திருக்கோயிலாமாற்றையும் அதனை வழிபடும் முறையினையும் பின்வருமாறு திருமந்திரப்படுத்திக் கூறியுள்ளார். அது வருமாறு:

" உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய் கோபுரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளா மணி விளக்கே '

இங்கு ஊனுரும் உடம்பு திருக்கோயிலாக அமைகிறது. அக்கோயிலில் மையங்

கொண்டுள்ள கருவறையாக உள்ளமும், திருக்கோயிலின் கோபுர வாயிலாக வாயும், கருவறைமேவும் சிவலிங்கமாக உயிரும் அமைகின்றன. இந்நிலையில், வஞ்சம் புரிந்து, உயிர்க்கு இழுக்கினைச் செய்யும் ஐந்து புலன்களும், அழகிய மணிவிளக்குகளாகத் திகழ்கின்றன. ஆன்மாவை வஞ்சித்து அதற்குத் தீங்கு பயக்கும் கருவிகளாகத் திகழும் மெய், வாய் முதலான பொறிகள் ஐந்துமே, மெய்யுணர்ந்து புலனடக்கம் எய்திய நிலையில் இறைவனைக் காணுவதற்கு உதவும் கருவிகளாக-மணிவிளக்குகளாக மாற்றமெய்தி விளங்கும் தன்மை சிந்தித்துணரத்தக்கது. மானிட உடல் திருச்சுற்றுக்களோடு கூடிய பெரியதோர் ஆலயம் என்றும், அவ்வுடலின் உள்ளே அமைந்துள்ள உள்ளம் ஆண்டவன் உறையும் கோயில் என்றும் கூறியிருக்கும் உண்மை நுட்ப மிக்கதாகும். இவ்வாறே அககோயில் வழிபாட்டிற்கு வேண்டுவன அனைத்தையும் திருமூலர் 'சிவபூசை' என்னும் பகுதியில் விரித்துரைத்துள்ளார்.

பக்திநெறி நின்று, சரியை கிரியை வழிப்பட்டுத் தொண்டு பூண்டொழுகும் மக்கள் நாளடைவில் புறவழிபாட்டோடு அகவழிபாட்டையும் மேற்கொண்டு, இறைவனைத் தம் இதயத்தில் கண்டு உயர்வுற்று உய்தி பெறல் வேண்டும் என்னும் நினைப்பில் சமயகுரவர்கள், அருள் நலங்கனிந்து விளங்கும் தங்கள் திருப்பாடல்களில் அகப்பூசை நெறியினையும் விளக்கிக் காட்டியுள்ளனர். தொண்டின் திருவுருவாகத் திகழ்ந்த அப்பரடிகள் மிகவும் தெளிவாக அதனை விளக்கிக் கூறியுள்ளார். அகப்பூசை நெறி விளக்கும் அடிகளின் தனித்திருநேரிசை வருமாறு :—

'காயமே கோயிலாகக் கடிமனம் அடிமை யாக
வாய்மையே தூய்மை யாக மனமணி
[இலிங்கமாக
நேயமே நெய்யும் பாலா நிறைய நீர்
[அமைய ஆட்டிப்
பூசனை யீசனுர்க்குப் போற்றுவிக்காட்டினேமே'

உடல்நலனைப் புறக்கணித்து மேற்கொள்ளும் நோன்புகளைப் பயின்று பின்னர் அவற்றின் பயனின்மையினைத் திருவருளால் உணர்ந்து கொண்டு, புறச்சமயத்தினின்றும் புறம்போந்து இறைநெறி தழுவிய அடிகள், ஆன்மாக்கள் மெய்யுணர்ந்து இறையருள் பெறுவதற்குக் கருவியாக மக்கட்குக் கிடைத்திருப்பது காயமாகிய உடலே என்றும், அதுவே ஆண்டவன் அமரும் ஆலயம் என்றும் உணர்த்தியுள்ளார். உடம்பு கோயிலாகவும் இறைவன் பொருள்சேர் புகழ்கூறும் வாய்மை தூய்மையாகவும், மனத்துள் மன்னும் உயிர் மணிலிங்கமாகவும், அன்பு நெய்யும் பாலும் முதலாகிய ஆட்டும் பொருள்களாகவும் (அபிடேகப் பொருள்கள்) போற்றிகள் அணியாகவும் அமைத்துக் காட்டியுள்ளார். முனைப்புற்றுப் புறத்தே தேடலுற்ற அரியும் அயனும் காணமாட்டாத இறைவனை, அடிகள் தன் உள்ளத்தில் தேடிக்கண்டு கொண்டதாகத்

'தேடிக் கண்டு கொண்டேன்
திருமாலொடு நான்முகனும்
தேடித்தேடொணாத் தேவனை என்னுளே
தேடிக்கண்டு கொண்டேன்'

எனக் கூறியுள்ளார்.

இறைவனை உள்ளத்தே அமைத்து வழிபடும் அகப்பூசையினை 'அந்தரியாகம்' என்று சித்தாந்த சாத்திரம் சாற்றுகின்றது. அந்தரியாக மென்னும் அகப்பூசை முத்திப்பேறு அடைவிக்கும் சாதனங்களில் ஒன்றென்றும், அஃது ஆன்மசுத்தியாகுமென்றும் சிவஞான சித்தியார் உரைக்கின்றது. வழிபாட்டிற்குரிய மலர், தூபம், தீபம், திருமஞ்சனம், அமுது முதலான அனைத்தையும் மனத்தாற் கருதி, அவற்றால் அர்ச்சனை முதலியன செய்து வழிபட இறைவன் ஆண்டு விளங்கித் தோன்றுவான். அதன் பயனாக அங்ஙனம் செய்யும் ஆன்மாக்களின், மலம் தேய்ந்து, பற்றற்ற நிலை தோன்றும். இதனைச் சித்தியார்,

"அந்தரி யாகம் தன்னை முத்தி சாதனமா
அறைந்திடுவா அதுதானும் ஆன்ம
[சுத்தியாகும்
கந்தமலர் புகைஒளி மஞ்சனம் அமுது
[முதலாக்
கண்டன வெலாம் மனத்தாற் கருதிக்
[கொண்டு
சிந்தை தனில் அர்ச்சிக்கச் சிவனை
[ஞானத்தால்
சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை
[விளக்க
வந்திடுமவ் வொளிபோல மருவியரன்
[உளத்தே
வரவர வந்திடுவன் பின் மலமானது
[அறுமே

எனச் சாத்திரப்படுத்திக் காட்டியுள்ளது. சைவசமயம் சாற்றும் 'அகப்பூசை' ஒளியிற் சிந்திக்குமிடத்து, "மலர்மிசை ஏகினான்" என்னும் திருக்குறளின் பொருள் நன்கு விளக்கமெய்தல் கூடும்.

நாயன்மார்களில் ஒருவரான பூசலார், அகப்பூசையின் ஏற்றத்தினை நன்கு காட்டவல்லதோர் எடுத்துக்காட்டாவார். அவரைச் சுந்தரர் தம் திருத்தொண்டத் தொகையில் 'மன்னியசீர்

மறைநாவன் நின்ற வூர்ப் பூசல்' என ஊரும் பேரும் மட்டுமே கூறி ஏத்த, நம்பியாண்டார் நம்பி,

"பதுமநற் போதன்ன பாதத்து
அரற்கு ஒரு கோயிலேயான்
கதுமெனச் செய்குவது என்று
கொலாமென்று கண்துயிலாது
அதுமனத்தே எல்லிதோறும்
நினேந்து அருள்பெற்றது"

எனச் சிறிது விளக்கியுரைத்தார். விரிநூல் செய்த சேக்கிழார், நாயனுர்தம் மனத்திலே எழுப்பி நிறுவிய ஆலயத்தின் மாட்சியினே விரிவாகக் காட்டியுள்ளார். பூசலார் மனத்தில் எடுத்த திருக்கோயிலேச் 'சிந்தை ஆலயம்' என்று சேக்கிழார் கூறுகின்ருர். நின்றவூரில் பூசலாற் தம் சிந்தையிற் சிவாலயம் அமைத்து முடித்த அக்காலே, காடவர் கோமானுகிய வேந்தன் பெரும் பொருட்செலவில் காஞ்சி மாநகரில் கற்றளி எடுத்து முடிக்கின்ருன். இருவரும் தாங்கள் எடுத்த ஆலயங்களில் ஒரே நாளில் இறைவனேத் தாபிக்க எண்ணு கின்றனர். இறைவன் அரசன் கனவில் பூசலார் ஆலயச் சிறப்புணர்த்தி, வேருெரு நாளில் அவனுடைய சிலே நாட்டுவிழாவைக் கொள்ளுமாறு ஏவுகின்ருர். இதனுல் எண்ணற்ற மக்களின் புறப்பூசைக்கு உதவும் வகையில், புறத்தே எடுக்கப்படும் ஆலயத்தையும் ஆண்டுச் செய்யப்படும் புறப்பூசையையும் விட ஆன்மா தன் மேம்பாடு கருதித் தன்னே உணர்ந்துய்திபெறத் தன் உள்ளத்தமைக்கும் ஆலயமும் ஆண்டுச் செய்யப்படும் அகப்பூசையும் மேலானவை என்பது விளக்கமுறுகின்றது. உள்ளக்கோயிலில் உறையும் மூர்த்தியை அப்பரடிகள் "உள்ளமாய் உள்ளத்தே நின்ருய் போற்றி, உகப்பார் மனத்தென்றும் நீங்காய் போற்றி," எனப் போற்றுகின்ருர். 'வாய்த்தது ஈதோர் பிறவி மதித்திடுமின்' என அடிகள் கூறியவாறு, அரிதாய்க் கிடைத்த மானிடப் பிறவியின் மாட்சி உணர்ந்து, புறத்தே போற்றும் வழிபாட்டொடு அதனினும் மேலாய அகப்பூசையினேயும் முயன்று ஆற்றி இன்பம் காண முயல்வது மக்கள் கடமையாகும்.

## கணவனேத் தண்டித்த காரிகை

தெள்ளாறு என்ற ஊரை அனேவரும் அறிவர். "தெள்ளாறு எறிந்த நந்தி வர்மன்" என்ற பல்லவ மன்னனின் வரலாற்றுத் தொடர்புடையது. ஒரு காலத்தில் அந்த ஊர் வாரியத்துக்குப் பெண் ஒருவர் தலேவியாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றிருந்தார். அந்தப் பெண்ணின் கணவன் செய்த குற்றத்திற்காக ஊர் வாரியத்தின் முன் விசாரணேக்குக் கொண்டுவரப்பட்டான். விசாரணே முடிந்ததும் அவனுக்குத் தண்டனே விதித்தாள் வாரியத்தின் தலேவி. என்ன தண்டனே தெரியுமா? நாள்தோறும் மாலேயில் அவ்வூரிலுள்ள சிவன்கோயிலுக்கு விளக்குப் போடவேண்டுமென்பது. அவ்வாறே அவனும் செய்து வந்தான். ஒரு நாள் மாலே வாரியத்தலேவி கையில் கிண்ணத்தில் எண்ணெய், திரிநூலுடன் புறப்பட்டாள். இதைக் கண்ட அக்கம் பக்கத்திலுள்ள பெண்கள் ஏன் ஆண்களும் கூட-அவளேச் சூழ்ந்து கேட்டனர், "கணவனுக்கு நீயே கொடுத்த தண்டனேயை அவன் செய்து கொண்டு வந்ததை இன்று நீயேன் செய்கிருய். இது உன் தீர்ப்புக்கு விரோதமான செய்கையல்லவா?" ஊர்வாரியத்தலேவி அமைதியாக, "நீதிபதி என்ற முறையில் நான் தண்டனே விதித்தேன். அது என் உரிமை. இன்று என் கணவர் உடல் நலமில்லாதிருப்பதால் அவர் மனேவியாகிய யான் அவர் செய்யவேண்டியதைச் செய்கிறேன். இது என் கடமை" என்று சொல்லிக் கோயிலே நோக்கி நடந்தாள் விளக்கேற்ற. சூழ்ந்து வந்த மக்களும் அவளுடைய உரிமை உறைப்பையும், கடமையுணர்ச்சியையும் கண்டு மகிழ்ந்தனர்.

என்னே அப்பெண்மணியின் பண்பு!

—மயிலேவாணன்

௳

# பிறவாமை வேண்டும்

புலவர் த. கோடப்பிள்ளை, எம்.ஏ.,

## காட்சி 5 (தொடர்ச்சி)

நண்பர் 1 : உங்கள் அன்புக்கும் பரமன் பற்றுக்கும் ஒரு குறையும் வராது. சிவாயநம என்றிருக்கும் உங்களுக்கு ஒருநாளும் அபாயம் வராது. அரன் அடியார்க்கு அள்ளி அள்ளிக் கொடுக்கும் தாங்களும் தங்கள் துணைவியாரும் எல்லா நலமும் பெற்றுப் பல்லாண்டு வாழ்வீர்கள். இதோ பாருங்கள், உங்கள் அன்பு பெற்ற நானும் ஒரு குறையும் இல்லாது வாழ்கிறேன்.

பரம : சிவ சிவ. நண்பரே! என்மீது கொண்ட அன்பினால் என்னை உயர்த்திப் பேசுகிறீர்கள். எல்லாம் ஆண்டவன் அருளால் அவனியெங்கும் தழைக்கிறது.

நண்பர் 2 : ஆமாம், அழல் வடிவாயமைந்த அரன்கழல் தொழும் தொழும்பர் உளக்கோயி லில் குடியிருந்து உங்கள் கையால் கொடுக்கும்படி செய்த அவன் பெருமையை என்னென்பது!

பரம : எதனைச் சொல்கிறீர் நண்பரே!

நண்பர் 1 : உங்களுக்கு நினைவில்லையா? நான்கைந்தாண்டுகளுக்கு முன் நான் தங்கள் இல்லத்திற்கு வந்திருந்தபோது தங்கள் தோட்டத்தில் முளைத்ததென்று கூறி மாங்கன்று ஒன்றைக் கொடுத்தீர்களே.

பரம : ஆமாம், ஆமாம்... நினைவுக்கு வருகிறது.

நண்பர் 1 : அந்த மாங்கன்று தந்த மாம்பழங்கள்தான் இந்த இரண்டு மாம்பழங்களும்.

பரம : அப்படியா?

நண்பர் 1 : ஆம், அவன் அருள்போல் தழைத்து வளர்ந்த அந்த மாங்கன்று மரமாகி இன்று இந்தப் பழங்களை ஈந்தது.

நண்பர் 2 : ஆமாங்க, நல்ல காய்ச்சிருக்குங்க. குலைகுலையாத் தொங்குதுங்க. அந்தப் பழங்களை அறுத்துத் தின்பதற்கு முன்னே அந்த மரத்தில் பழுத்த பழங்களில் இரண்டை முதலிலே உங்களுக்குக் கொடுத்துவிட்டுப் போகணும் என்றுதான் கொண்டு வந்தோம்.

பரம : சிவசிவ...கன்று வைத்துத் தண்ணீர் ஊற்றி வளர்த்தவர் நீங்கள்; அதன் பயனை நீங்கள் அனுபவிக்காமல் எனக்கு முதலில் கொடுப்பது...

நண்பர் 1 : நண்பரே! நாங்கள் உங்களை எங்கள் நண்பர் என்று மட்டும் மதிக்கவில்லை. சிவனடியார்களில் சீரியோராய் மதித்து உங்களைப் போற்றுகிறோம். அதனால் முதலில் உங்களுக்குக் கொடுத்துப் பின் நாங்கள் உண்போம். இப்பழங்களை எங்கள் அன்பளிப்பாகப் பெற்று உண்டு மகிழுங்கள்.

பரம : என்னைக் காப்பாற்றும் என் இறை இப்பழங்களையும் கொடுக்குமாறு செய்கிறான். மறுக்காமல் பெற்றுக் கொள்கிறேன். மிக்க நன்றி. பாராட்டுகிறேன். நண்பர் களே! இந்தா சிவப்பழம்! இந்த மாம்பழங்களை வீட்டிற்குக் கொண்டுபோ.

## காட்சி 6

இடம் : தெரு

உறுப்பினர் : நந்தி, சிவப்பழம்,

நந்தி : அண்ணே! அண்ணே!

சிவ : (நடந்து போதல்)

நந்தி : அண்ணே ! சிவப்பழம் ! சிவப்பழம் !

சிவ : (திரும்பி) ஓ…நந்தியா ? வா தம்பி !

நந்தி : என்ன அண்ணே அத்தனை முறை கூப்பிடுகிறேன், திரும்பியே பார்க்கலே.

சிவ : காதிலே விழலே தம்பி.

நந்தி : ஆமா ஆமா, காதிலே விழாது. நான் உரக்கத்தான் கத்தினேன். நீ கவனிக்கலே. நான் நாள்தோறும் சிவ சிவா, சிவ சிவா என்று கத்தி கத்திப் போற்றுகிறேன்; பாடுகிறேன்; ஆடுகிறேன். என்னுடைய ஆட்டமும் பாட்டமும் அந்தச் சிவனுக்கே காதிலே விழலே. உனக்கு எங்கே அண்ணே நான் கூப்பிடுவது காதிலே விழும்.

சிவ : என்ன நந்தி ! என்மேல் இருக்கும் குறையைச் சுட்ட இறைவனிடமே குறை சுட்டுகிருய் !

நந்தி : பின்னே என்ன அண்ணே ! நான் எவ்வளவு துயரப்படுகிறேன். அது அவனுக்கு தெரியுதா? என்னைப் பாருங்க. சிவபூசை செய்யறதிலே நான் எந்த வகையில் குறைவு? காலை மாலை நடுப்பகல் எல்லா வேளையிலும் அவனை நினைக்கிறேன். சாப்பாட்டுக்கு முன்பு நினைக்கிறேன். சாப்பிட்டப்புறம் நினைக்கிறேன். வாயாலே சிவ சிவா என்று சொல்கிறேன். உடம்பெல்லாம் திருநீறு அணிந்து கொள் கிறேன். இல்லே, அதிலேதான் குறைவா? ஏன் எனக்கு மட்டும் அந்த இறைவன் குறையை வைத்தான்?

சிவ : என்ன குறையை வைத்தான் ?

நந்தி : என்ன அப்படி கேட்டுப்புட்டே ! எனக்கு எந்தக் குறையைத்தான் வைக்கலே ? சரியா சோத்துக்கு வைத்தானு? பெண்டாட்டியைப் பிரியமா இருக்க வைத்தானு? பிள்ளைக் குட்டிகளைத்தான் அளவோடு வைத்தானு ? இல்லே மனதைத்தான் நிம்மதியாயிருக்க வைத்தானு ?

சிவ : தம்பி நந்தி ! எல்லாம் நம் மனதிலேதான் குறை இருக்கிறது. மனம்போல வாழ்வு வரும். நீ அது இது என்று அங்கும் இங்கும் அலையாதே. நல்லா ஓரிடத்திலிருந்து உண்மையா உழை; ஒரு குறையும் தரமாட்டான் ஆண்டவன்.

நந்தி : என்னண்ணே நீ சொல்வது ! இதோ, வீட்டுக்குப் போனேன். அங்கேயோ பிச்சுப்பினுட்டிட்டுதுங்க…இங்கே ஒன்று அங்கே ஒன்று உட்கார்ந்துகிட்டு. நான் என்ன பன்றது? பேசாமல் எழுந்து வந்துட்டேன். பசி வயிற்றைக் கிள்ளுது. எல்லார்க்கும் சிவத்தலங்களிலே இருந்து வந்த பிரசாதம் என்று சொல்லி சொல்லிக் கொஞ்சம் காசு சம்பாதித்து பிழைத்து வந்தேன். அதையும்தான் நீ தடுத்துட்டே. இப்போ எனக்கு என்ன வழி? சரி…அந்தப் பையிலே என்ன இருக்கிறது அண்ணே?

சிவ : ஆ…அதுவா? பழம்…மாம்பழம்.

நந்தி : மாம்பழமா…ஆகா…அண்ணே சிவப்பழம்! மாம்பழம்…மாம்பழம். எனக்கு ஒன்று கொடேன்.

சிவ : ஐயையோ…ஐயா, வீட்டிலே கொடுத்து வரச் சொன்னுர். அதற்காக எடுத்துக் கொண்டு போகிறேன். உனக்கு எப்படித் தருவேன் ?

நந்தி : பசித்தவர்க்குப் பகிர்ந்தளிக்கும் புனிதவதியாரின் கணவர் கொடுத்த மாம்பழம் என் பசியை அடக்க உதவாதா…

சிவ : நந்தி ! உன் பசிக்கு உணவு வேண்டும். அவ்வளவுதானே ? இந்த மாம்பழம் எனதுடைமையானல் நான் கொடுக்க முடியும். நாமோ அடித்தொண்டு செய்து பிழைக்கிறோம். சரி…இந்தாக் காசு…இதை எடுத்துக்கொண்டு போய்ச் சோற்றுக் கடையிலே சாப்பிடு.

நந்தி : நல்லாயிருப்பே அண்ணே ! நான் அந்தச் சிவபெருமானைத் தப்பா நினைத்து விட்டேன். அவன்தான் உன் உருவிலே வந்து எனக்கு அடிக்கடி உதவி செய்கிருன். சிவ சிவ…சம்போ மகாதேவா !

(தொடரும்)

# எழுத்துப்பட்டிமன்றம்



## திருக்கோயில் கருவறைக்குள் சென்று இறைவனுக்குப் பூவும் நீரும் இட்டு வழிபாடு செய்யும் உரிமை சீலமுடைய அனைவருக்கும் உண்டா இல்லையா?

### இல்லை-என்று வாதாடுகிறார்

ச. வேலுசாமி குருக்கள், செட்டிபாளையம்

இன்றைய உலகில் உண்டு இல்லை என்ற வாதங்கள் ஏற்பட்டு பட்டிமன்றங்கள் பல்கினால் தான் ஆத்தீகமும், ஆன்மீகமும் நிலைத்திருக்கும் அதற்கு இணங்க சுவைமிக்க உணவைப் படைத்த திரு. கார்மேகம் எம்.ஏ. அவர்கள், 'இறைவனை அம்மையே அப்பா என்றழைப்ப தால் எல்லோருக்கும் அவர் தாய் தந்தை ஆவார். அவரைச் சாதி வேறுபாடின்றி கருவறைக்குள் சென்று வழிபடுதல்பிறப்புரிமை' என்கிறார். இறைப் பரம்பொருள் ஒருவனே. அவனே சிவசக்தியாகி உலகை இயக்குகிறான். அவரை வழிபட (1). ஆத்மார்த்தம், (2) பரார்த்தம் என்ற இரு வழிமுறைகள் உள்ளன.

1. ஆத்மார்த்தம் என்பது சிவதீட்சை பெற்ற ஒவ்வொருவரும் தன் வீட்டிலே இறைவனை வைத்துப் பூசிப்பது.

2. பரார்த்தம் என்பது உலகஜீவன்களின் நலனை முன்னிட்டு, பரிகாரம், அருச்சனை, விசேட வழிபாடுகளை அதற்கென இருக்கும் ஆதிசைவ அர்ச்சகரைக் கொண்டு செய்விப்பது. ஆசானில்லாத அறிவு தெளியாததைப் போல ஆதிசைவ அர்ச்சகர் மூலம் நடத்தப்பெறாத வழிபாடு சிறப்பாகா என சிவாகமம் இயம்புகிறது. உலகின்கண் ஆண், பெண்-சாதி இரண்டு தானே என்று தங்கையை தாரமாக்கிக் கொள்ள முடியுமா? முடியாது போல எத்தகைய செயலுக்கும் கட்டுப்பாடும், வழிமுறையும், சட்டமும் ஒழுக்கமும் இருந்தே தீர வேண்டும். அப்பொழுதுதான் அவ்விடம் பொலிவுறத் திகழும்.

கண்ணப்பரை எடுத்துக்காட்டினால் தகுமா?

கண்ணப்பர் இறைவனைச் சிலையாகவோ, இறைவனாகவோ எண்ணாமல் தன் உயிரை மேவிய உடலாக எண்ணித் "தம் கண் இடந்து அப்பி" உதவினார். அத்தகைய செயற்கரிய செயலைச் செய்பவர் யார் உளர்? ஆகையால் அவர் போன்ற திருத்தொண்டர்களை நாம் போலிகளோடு ஒப்பிட்டால் தகுமா? மேலும் திருமூலர், திருவள்ளுவர், நாயன்மார்கள் காலத்தில் சாதி, மத வேறுபாடின்றி, சீலமுடையோர் அனைவரும் கருவறைக்குள் சென்று இறைவனை வழிபடலாம். அவர்கள் காலத்தில் சாதி, மத வேறுபாடில்லை என்றும் அவ்வாறிருக்க அந்தணர்கள் சிவாகமம் என்ற பெயரால் அவ்வாறு வழிபடக் கூடாதென்று மறுக்கின்றனர் என்றும் இதைச் சுருக்கமாகச் சொன்னால் அது அவர்கள் சுயநலம் என்றும், எல்லாமொன்று என சாதி வேறுபாட்டைப் புறக்கணித்துக் கூறப்பட்ட இக் கார்மேகம் அவர்கள் அந்தணரைச் சுட்டிக் காட்டியது சொல்லுக்கும் செயலுக்கும் முரண்பாடானதாகும். கீழ்க்கண்ட ஆதாரங்களைக் காண்க:-

திருமூலர் திருமந்திரம் 20-அகனிகார்யம் என்ற தலைப்பிலே "ஆகுதி வேட்கும் அருமறை அந்தணர் போகதி நாட்டிப் புறங்கொடுத் துண்ணுவர்"-என்பதாலும்,

21-வது அந்தணரொழுக்கம் என்ற தலைப்பிலே "அந்தணராவோர் அறுதொழில் பூண்டுளோர் செந்தழலோம்பி முப்போது நியமஞ் செய்தந்தவ நற்கருமத்து நின்றாங் கட்குச் சந்தியும் ஓதிச் சடங்கறுப் போர்களே", என்பதாலும் திருவள்ளுவர் "அந்தணரென் போர்" "அறவோர்" என்பதாலும் அந்தணர் என்ற மரபு அவர்கள் காலத்திலேயே இருந்த தென்றும் அவர்கள் அருமறை உணர்ந்து ஆகுதிகள் வளர்த்து பிறர்க்கீந்துண்ணுவர் என்றும் அவர்களுக்கு ஆறு தொழில்கள் என்றும் அதிலே செந்தழலாகிய சிவபெருமானுக்கு முப்போதும் நியமஞ்செய்வதும், அவர்கள் தொழில் என்பது புலனாகிறதல்லவா? மேலும் நால்வரிலே சுந்தரர் தடுத்தாட் கொண்ட புராணத்திலே "மாதொரு பாகனார்க்கு வழிவழி யடிமை செய்யும் வேதியர் குலத்துள் தோன்றி மேம்படு சடையனார்க்கு" என்பதாலும் திருமூலர் திருமந்திரத்திலே 3. ஆகமச் சிறப்பு என்றதிகாரத்திலே "அஞ்சனமேனி அரிவை

யோர் பாகத்தன் அஞ்சொடிருப்பது மூன்றுள ஆகமம்" என்பதால் அவ்விருபத் தொட்டாக மத்திலே "காரணாகமம்", நித்யார்ச்சனுவிதி படலம் 13-வது சுலோகத்திலே" ஆத்மார்த் தஞ்ச பரார்ந்தஞ்ச உற்யாதி சைவேன பூஜிதம்" அதாவது சிவதீக்கை செய்வித்து ஆத்மார்த்த பூசை செய்விப்பதற்கும், பிறரின் பொருட்டு செய்யப்படும் பரார்த்த பூசைக்கும் ஆதிசைவ அந்தணரே உரியர் என்பது புலனுகும். இவ்வெடுத்துக்காட்டுக்களைக் கொண்டு (திரு. கார்மேகம எம்.ஏ., அவர்கள் சுட்டிக் காட்டிய அதே திருமூலர், திருவள்ளுவர், நால்வர் காலங்களிலே) அந்தணர்கள் கூறும் ஆகமங்கள் உண்டென்றும், அதிலே ஆதிசைவ அந்தணரே பூசை செய்ய அருகதை உடையவர்கள் என்றும் மாதொரு பாகனர்க்கு வழிவழி அடிமை செய்யும் ஆதிசைவ வேதியர் குலத்திலே நம்பியாண்டார் நம்பியும், சுந்தரரும் தோன்றியதால் திரு. கார்மேகம் எம்.ஏ., அவர்கள் சுட்டிக்காட்டிய அந்தணர் மரபு அத்திருத்தொண்டர் காலத்திலேயே இருந்த தென்றும், ஆதிசைவ அந்தணர்கள் எக்காலத்திலும் எவ்வகைச் சூழ்நிலையிலும், பிறர்க்காகவோ தன் சுயநலத்திற்காகவோ அன்றி மாதொரு பாகனர்க்கு வழிவழி யடிமை செய்யும் உரிமையுடையவர்கள் என்று உறுதி யிட்டும் இறந்த, நிகழ், எதிர்காலங்களிலும் அவர்கள் தன் இறைப்பணியை சிரமேற் கொண்டு செய்வார்கள் என்றும் கூறுவதில் வியப்பில்லை.

மேலும் ஜனநாயக நாட்டில் பிறந்து எல்லா உரிமையும் உண்டென்பதற்காக எல்லோரும் சட்டசபை சென்று கேள்விகள் கேட்க முடியாது. அதற்கென உள்ள நம் பிரதிநிதிகள் மூலமே தமது தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டும். மற்றும் அரசாங்க அலுவலகம் ஒன்றிலே நாம் இந்திய ஜனநாயக குடிமகன் என்பதற்காக எல்லோரும் சர்வ சுதந்திரத் துடன் உள்ளே சென்று நமக்குத் தேவை யானவைகளை எடுப்போமானல் சட்டமும் ஒழுங்கும் தடுத்து நிறுத்தும். அதைக் காட்டினுமா கோவில் கருவறை மதிப்பிழந்தது.

அடுத்ததாக திரு. கார்மேகம் அவர்கள் தமிழ்நாட்டில்தான் இந்நிலை என்கிருர். ஆசிரியர் திருப்பதி சென்று வந்தால் அத் திருப்பதி ஏழுமலையான் ஆலயம் ஆந்திர நாட்டில் இருக்கிறதென்றும் அங்கே அதற்கென இருக்கும் அர்ச்சகரே வழிபாடு நிகழ்த்துகின்றனர் என்றும் தெரியவரும். கோவை, கோனியம்மன் ஆலயம், பன்னரி, மாரியம்மன் ஆலயம், பூண்டி, வெள்ளிங்கிரி ஆலயம் ஆகிய ஆலயங்களில் அந்தணரல் லாதவரும் அர்ச்சகராகப் பணிபுரிகின்றனர். மேலும் ஆலயத்திற்கு வரும் பக்தர்களின் வழிபாட்டின் பொருட்டு இசையோடு ஓதப்படும் திருமுறைத் தேவராப் பாடல்களையும், ஆகமங் களையும் பக்தர்கள் காதாரக் கேட்டு மகிழ்ந்து இறைவன்பால் சிந்தையை வைக்க, பக்தி கொள்ளச் செய்யவும், அருச்சனை, தேங்காய் சீட்டு போன்ற வருமானங்களால் ஆலயம் பரிபாலனம் செய்யப்படுவதோடு, எஞ்சியவை களைச் சமூகத் தொண்டுகளுக்கும் பயன்படுத்த கருவறைக்குள் திகழும் இறைவன் காரண மாகவும் அதற்கென உள்ள அர்ச்சகர் காரிய மாகவும் இருக்கிருர்கள் என்பதை யாவரும் சிந்திக்க வேண்டும். நம் தமிழரசு அப்பணி களில் தன்னிகரற்று விளங்குகிறது. மேலும் கலை நுணுக்கங்களோடு சிற்பத்திறன் செறிந்த ஆலய அமைப்பு முறைப்படி அமைந்த வானளாவிய ஆலயங்களை மேனுட்டவரும் கூட்டமாக வந்து கண்டுபோகும் ஒழுங்கையும், வழிபாட்டு முறைகளையும் வழுவாவண்ணம் கொண்டு விளங்கும் தென்னுட்டு ஆலயங் களோடு வடநாட்டு ஆலயங்களை ஒப்பிட்டால் தகுமா? அதற்காகத் தானே "தென்னுடுடைய சிவனே போற்றி என்னுட்டவர்க்கும் இறைவா போற்றி" என்று தென்னுட்டைச் சிறப்பித்துச் சொல்லி வைத்தார்கள். ஆகவே போகமார்க்கி களாகிய நாம் எல்லாவிடங்களிலும், சட்டம், ஒழுங்கு, நேர்மை கொண்டு ஆலயங்களில் பழைய வழிமுறை பிறழாது ஆதிசைவ அந்தணர்களைக் கொண்டு வழிபாடுகள், பரிகாரங்கள், சிவதீக்கைகள் முதலியவை களைச் செவ்வித்துக் கொளல் வேண்டும். அவர்கள் கருவறைக்குள் இருக்கும் இறைவனைக் காலமறிந்தமுதூட்டும் அன்னை யைப் போன்று அன்ருடம் செய்யும் கடமைகளை மனம் பொருந்திய அன்புடன் செய்ய வேண்டும். அவ்வாறு செய்தால் உலக உயிர்களின் மன இருள் அகன்று ஞானஒளி தோன்ற ஏதுவாகும். ஆகையால் இறைவன் இருக்கிருர் என்றும், அவரால் உண்டாக்கப்பட்ட திருமூலர் மொழிந்த இருபத்தெட்டாகமங்களை மெய் யென்று நம்புவோரும். திருத்தொண்டர்கள், நாயன்மார்கள், அளித்த செந்தமிழ்த் தேவாரப் பாடல்களை நம்பி மெய்யுருகும் அன்பரனை வோரும், ஆதிசைவ அந்தணர் மரபு அன்றே உண்டென்றும், அவர்கள் மூலம், வழிபாடுகள்' ஞான உபதேசங்கள் நடத்திக் கொள்ள வேண்டுமென்றும், சிந்தை தெளிந்து சாதாரண அந்தணரென்று எண்ணுது ஆதிசைவ குருக்கள் எனத் தீர்மானிப்பர். இன்னும் எவ்வளவோ கூறலாம். கட்டுரை மிகும் என அஞ்சி, யாராவது மனம் நொந்திருந்தால் அதற்காக வருந்தி, கருவறைக்குள் இறைவனுக்கு அதற்கென உள்ள ஆதிசைவ குருக்கள் மூலமே வழிபாடுகள் நடத்திக் கொள்ள வேண்டுமென்று மக்கள் மேடையிலே கூறிக்கொள்கிறேன்.

# ‘மறுபிறப்புண்மை’

[9-8-75 முற்பகல் 11 மணி, காஞ்சிபுரம் தொண்டைமண்டல ஆதீனம் சீலத்திரு ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் திருமடாலயத்தில் பூசை முதலியவற்றை முடித்துவிட்டு அமைதியாக அமர்ந்தருளியிருந் தார்கள். சென்னையிலிருந்து பேட்டி காணச் சென்ற திரு. கலியாணம் பிள்ளை அவர்கள் உள்ளே நுழைந்து, அடிபணிந்து நின்றார்.]

க. கலியாணம்: வணக்கம்.

சுவாமிகள்: (திருநீறு அளித்து, நெற்றியிலிட்டு) வாழ்க! வருக! அமர்க! (ஒரு விரிப்பைக் காட்டுகிறார்கள். திரு. கலியாணம் அவர்கள் அமர்கிறார்.

க. க: சந்நிதானம் பேரவை 1966ல் தொடங்கியது முதல் தமிழ்நாடு தெய்விகப் பேரவையின் மாநிலக்குழு உறுப்பினராகத்தானே இருந்து வருகிறது?

சு: ஆமாம், ஆமாம்.

## பெரியோர் பேட்டி

க. க. பேரவையின் வெளியீடான ‘அருளோசை’ என்ற திங்கள் இதழ் தொடங்கி மூன்றாண்டுகள் முடிந்து நான்காவது ஆண்டு தொடங்கியிருக்கிறது.

சு: ஆமாம், அது நல்ல முறையில் நடக்கிறது. நாமும்தான் அதில் கட்டுரைகள் எழுதி வருகிறோமே.

க. க.: சென்ற இதழ் முதல் அதை அதிக பக்கங்களுடனும், பெரிய அளவிலும், சில புதிய அம்சங்களுடன் வெளியிடத் திட்டமிட்டோம். அதில் பெரியோர்களைப் பேட்டி காண்பது என்பதும் ஒரு பகுதி.

சு: சரி, அதற்காக என்ன செய்யப் போகிறீர்கள்.

க. க.: சந்நிதானம் போன்ற சான்றோர்களிடம் சென்று தமிழ்நாடு தெய்விகப் பேரவையின் தொண்டுகளையும், சமய-சமுதாயம் தொடர்பான பிரச்சினை பற்றியும் அவர்களுடைய கருத்துக்களைத் தெரிந்து அவற்றை ‘அருளோசை’யில் வெளியிட வேண்டுமென்பதே.

சு. அப்படியானால் என்ன கேட்க வேண்டுமோ கேளுங்கள், சொல்கிறேன்.

க. க.: பேரவை இதுவரையில் செய்துள்ள பணிகளைப் பற்றி சந்நிதானம் அவர்களின் திருவுளம் எப்படியோ?

சு: நாகர்கோயிலில் நடந்த மாநில மாநாட்டைப் போல ஒரு சமய மாநாடு நாம் இதுவரையில் பார்த்ததில்லை. திருச்சிராப்பள்ளி மாநாடுதான் பெரிதாகவும் சிறப்பானதாகவும் இருந்ததென்று எண்ணியிருந்தோம். நாகர் கோயில் அதைவிடப் பெரிதாக அமைந்து விட்டது; திருச்சிராப்பள்ளியைச் சின்னதாக்கி விட்டது. நாஸ்திகர்கள் இப்போது ஆஸ்திகர்களாகி வருகிறார்கள். ஏதோ ஒரு சக்தி பின்னால் இருந்து இயக்கி வருகிறது. குன்றக்குடி சந்நிதானம் அவர்களின் அயராத உழைப்பும் பேச்சுத் தொண்டுமே பேரவையை இந்த அளவுக்கு முன்னேறச் செய்திருக்கிறது.

க. க.: எல்லா மாவட்டங்களிலும் ஏறக் குறைய 2500 கிளைச் சங்கங்கள் இருக்கின்றன; அவற்றில் ஒரு இலட்சம் பேர் இருக்கிறார்களே!

சு: ஆமாம்-அதுதான் பேரவையின் வேகமான முன்னேற்றத்துக்கு அறிகுறி.

க. க.: எதிர்காலத்திலே பேரவை எவ்வகைப் பணிகளைச் செய்யலாம் என்பது அவ்விடத்துத் திருவுள்ளம்.

சு. அதையா கேட்கிறீர்கள். பேரவை ஒரு தினசரிப் பத்திரிகை நடத்தினால் நல்லது. இன்னும் பேரவையின் பணிகள் விரைவாக எங்கும் பரவவும் பயனுடையதாகவும் இருக்கும். அதை உடனே செய்ய முடியவில்லையானாலும் முதலில் அருளோசையை வார இதழாக்கிப் பின்னர் நாள் இதழ் ஆக்கலாம்.

க. க.: பேரவை நூல் வெளியிடுவது பற்றி திருவுள்ளம் ஏதோ?

சு: சமய சம்பந்தமான சிறு நூல்களை வெளியிட வேண்டும். அடக்க விலைக்கு அச்சிட்டு விற்க வேண்டும். அடக்க விலைக்கு விற்க வேண்டியதை முடக்கி வைத்துவிடக் கூடாது.

க. க.: அடக்கவிலைப் பதிப்புக்களான அபிராமி அந்தாதி, சிவபுராணம் இவை செலவாகி விட்டன. இப்போது அவற்றின் அடுத்த பதிப்புக்கள் அச்சாகி வருகின்றன.

சு: அப்படியா! அது நல்ல அறிகுறிதான். நூல்களை இலவசமாகக் கொடுத்தால் படிக்காமல் போட்டு விடுகிறார்கள். சிறு விலையாவது வைத்து விற்பதுதான் பயனுடையது.

க. க.: அண்மையில் நடந்த பதிப்பாளர் குழுக்கூட்டத்தில், ‘கடவுள்’, ‘உயிர்’, ‘உலகம்’, ‘கல்லன்று கடவுளே’, ‘இன்பம் துன்பம்’ என்ற

சிறு நூல்களைத் தக்க அறிஞர்களைக் கொண்டு எழுதச் செய்து வெளியிடச் செய்வதென்று முடிவு செய்யப் பெற்றிருக்கிறது என்பதை திருமுன்னர் சமர்ப்பிக்கிறேன்.

சு: அத்தகைய நூல்களை வெளியிட வேண்டியது அவசியம் தான்.

க. க. மறுபிறப்பு இல்லையென்று சில சமயத்தினர் சொல்கிறார்களே.

சு: எல்லா உண்மைகளும் சாட்சியளவையால் கண்கூடாக அறியலாகா. ஐம்புலக் காட்சிக்கும் எட்டாத உண்மைகளை அவ் ஐம்புலனுக்கும் வேறான அளவையால் கருதியுணரப் படும். ஐம்பொறிகளின் வழியாகப் புலப்பட மாட்டா. ஐம்பூதங்களில் ஒன்றாகிய காற்று ஐம்பொறிகளில் ஒன்றாகிய கண்ணுக்குத் தெரியாதிருந்தும் மெய்யென்னும் பொறியால் உற்றுணரப்படுகிறது. அதாவது ஸ்பரிச உணர்ச்சிக்கு எட்டுகிறது. கடவுள் முதலிய பற்பல உண்மைகள் நாம் உணர வேண்டின் காண்டல், கருதல், உரை (பிரத்தியட்சம், அனுமானம், ஆகமம்) என்னும் அளவைகளாலும் ஏனைய அளவைகளாலும் அறியப்படுதல் இல்லை. இல்லையெனினும் உண்மையுணர்ந்தோர் சொல்லும் சொற்களைக் கொண்டு நம்பி அவற்றை யறிய முயன்றால் அம்முயற்சியின் வளர்ச்சியால் அவற்றை அறிதல் நிச்சயமாகும். "நான் இளமையில் ஆஸ்திகனாயிருந்தும் கடவுள் முதலிய பொருள்களை அறியாமையால் ஆஸ்திக ஆசாரத்தையும் விடாமல் நாஸ்திகமும் பேசி வந்தேன். திருமுறைப் பாராயணமும் சாஸ்திரம் ஓதுவித்தலும் அவற்றின் பொருளைக் கேட்டலும் கேட்பித்தலும் நினைத்தலும் முதலிய ஞான வழிபாட்டால் கடவுள் உண்டு என்று உறுதியாக அறிந்தேன். கடவுளையும் அறிந்தேன். கடவுளாகவே இருக்கின்றேன்." இப்படி முன்னோர்களது உபகாரத்தை முழுதும் நம்பி அவற்றை ஒழுக்கத்தில் கடைப்பிடித்தால் உண்மைகள் பொய்மைகளாகப் பிறழாமல் முற்றும்தெளிய உணரலாம். தமிழில் இம்மை, மறுமை, வீடு என்று உயிர் அடையும் நிலைமையை உணர்த்தும் சொற்கள் உள. அவற்றுள் இம்மை என்பது இப்பிறப்பையும் இப்பிறப்பில் எய்தும் பயனையும் குறிக்கும். மறுமையாவது மறுபிறப்பையும் அவற்றின் எய்தும் பயனையும் குறிக்கும். இந்த மறுமை, இம்மையல்லாத ஆறு பிறப்பையும். மறுமையோடு சேர எழு பிறப்பையும் உணர்த்தும். பிறப்பில்லாத ஒன்றை மட்டும் வீடு என்பர். தமிழில் உள்ள தலையாய நூல்களும் தலைசிறந்த நூல்களும் எழுமையை (எழுபிறப்பைக்). கூறுகின்றன. திருவள்ளுவர் 'எழுமை எழுபிறப்பும் உள்ளுவர்' என்றும், 'எழுமையும் ஏமாப்புடைத்து' என்றும், 'எழுபிறப்பும் தீயவைதீண்டா' என்றும் கூறியவற்றை நம்புதல் தமிழர் கடனாகும். நாம் இப்போது பிறந்து இருந்து இறந்து போதலைக் கண்கூடாகக் காண்கின்றோம். இதற்குக் காரணம் முற்பிறப்பிற் செய்த வினையே என்பதும் இனிப் பிறக்கும் பிறவியில் அடையும் பயனுக்கு ஏது இப்போது செய்யும் வினையே என்பதும் முன்னோர்கள் அனுபவத்தில் கண்ட உண்மையாகும். ஆதலால் மறுபிறப்பு உண்டென்று அறிவர் மட்டும் அல்லாது மடவரும் எளிதில் அறிவர்.

> இறந்த பிறப்பில் தாம் செய்த வினையைப்
> பிறந்த பிறப்பால் அறிக—பிறந்திருந்து
> செய்யும் வினையால் அறிக இனிப்பிறந்து
> எய்தும் வினையின் பயன்

என்னும் ஜைன நூலும் மறுபிறப்பு உண்மையை நிலைநாட்டுகிறது. திருஞானசம்பந்தர் பலபல இடங்களில் இவ்வுண்மையை அருளுகின்றார். அவற்றுள் 'இம்மைக்கும் வினைவாதியா மறுமைக்கும் வருத்தம் வந்தடையா' என்று அருளியதை இங்கே நினைதல் வேண்டும். சிவஞான சித்தியாரில் இரண்டாவது சூத்திரப் பகுதியில் பிறப்பு ஆராய்ச்சி விரிவாக உளது.

க. க.: பேரவையின் எதிர்காலம் எப்படியிருக்கும்.

சு: பேரவைக்கு நல்ல எதிர்காலம் உண்டு என்பதில் எவ்வித ஆட்சேபணை யிருக்க முடியாது.

க. க. சந்நிதானம் அவர்களிடம் பேரவை பற்றியும், மறுபிறப்புப் பற்றியும் நல்ல விளக்கங்களைக் கேட்டுத் தெரிந்து கொண்டேன். நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சு: வாழ்க.

[திரு. க. கலியாணம் பிள்ளை, அவர்கள் விடைபெற்றுப் புறப்படுகிறார்.]

---

ஒன்றுகூடிக் கடவுளை வணங்கப் போகுமிடத்து, மனிதரின் மனங்கள் ஒருமைப்பட்டுத் தமக்குள் இருக்கும் ஆத்ம வொருமையை அவர்கள் தெரிந்து கொள்ள இடமுண்டாகுமென்று கருதி முன்னோர் கோவில் வகுத்தார்கள்.

ஊரொற்றுமை கோவிலால் நிறைவேறும். வீட்டுக்குள் தனியாகச் சிலை வைத்துக் கும்பிடுவது குடும்ப ஒற்றுமை உண்டாகும் பொருட்டாக.

—பாரதியார்

---

## ‘விடுதலை’க்கு விளக்கம்

### சாதுர்யமல்ல !

பிறப்பில் இனம் வந்து பொருந்துகிறது. இனவழி பிறப்பில் அமைவது; வளர்ப்பில் அமைவது. இஃதோர் இயற்கை நியதி. ஆனாலும், வாழ்க்கை முழுவதும் இனவழியில் காலூன்றி நின்றாலும் வாழ்க்கையின் முடிவு நிலையில் இனங்களைக் கடப்பதே முழுமையான வளர்ச்சி! சமயநெறி இனவழிச் சிந்தனைக்குத் தடையன்று. ஆயினும் இனங்களைக் கடந்த நெறி சமயநெறி. சமய நெறியில் வழிபாட்டு உரிமைகளைப் பிறப்பின் வழியில் இனம் அல்லது சாதிக்கு உரிமைப்படுத்துவது நன்னெறியன்று. இதுவே நமது சமயநெறி காட்டும் சீலம். திருக்கோயில் கருவறைக்குள் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானை இன, சாதி வேறுபாடின்றித் தகுதியும் தக்க அன்பும் உடையார் அனைவரும் புனலும் பூவுமிட்டு வழி பட உரிமையுண்டு. இந்த உரிமைகளுக்குப் பிறப்பின்வழி தடையில்லை. இது நமது ஆன்றோர் கொள்கை. நாம் ஏற்றுக் கொண்டிருக்கும் கொள்கையும்கூட! இந்த உரிமை முறை பிறழ்ந்த சமுதாய அமைப்பால் இடையில் பறிக்கப்பட்டிருக்கிறது. அந்த உரிமையை அடைய வேண்டும் என்று 1966 ஆம் ஆண்டு முதல் எழுதியும் பேசியும் வந்திருக்கின்றோம். தலைவர் பெரியார் இந்த உரிமைக்காகக் கிளர்ச்சி செய்யத் திட்டமிட்டது 1969-இல் தான். இந்த உரிமை நியாயமானது என்பதை நமது திருக்கோயில் சிவாசாரியர்கள்கூட ஏற்றுக்கொண்டிருக்கின்றனர். இந்த உரிமையை நெறிமுறைகளுக்கு உட்பட்டு அனைவரும் பெற 19-12-1969 ஆம் நாளில் அறிவிக்கப்பெற்றது. இந்த அறிவிப்பினைத் தொடர்ந்து சில ஆத்திகர்கள் சிவகங்கை முறையீட்டு மன்றத்தில் வழக்குத் தொடர்ந்தனர். அந்த நாள் முதல் இந்த உரிமையை நாம் அடைந்து அனுபவித்து வருகின்றோம். அப்படியிருக்க ‘உரிமையில்லை’ என்று கூறுவது எப்படி?

தஞ்சைத் திருக்கோயில் முகப்பில் வரவேற்போம் என்று குறிப்பிட்டது வரவேற்கும் மரபுகளுக்கு இசைந்தேயாம்! நிகழ்த்த வேண்டிய வழிபாடு கருவறையிலேயே யானாலும் அதற்கு வரும் பக்தர்களைத் திருக்கோயில் நுழைவாயிலில் வரவேற்பதுதானே முறை! மரபு! அதுவும் பல ஆண்டுகளாக வாராதிருந்தவர்கள் வரும்பொழுது நமக்கு மகிழ்ச்சியிருக்காதா? அந்த மகிழ்ச்சியில் திருக்கோயில் மரியாதைகளுடன் இதயத்தில் அன்பைத் தாங்கி அவர்களை வரவேற்க வேண்டும் என்ற விருப்பமேயாகும். இதற்குத் தேவை சாதுர்யமல்ல! சதுரப்பாடான அன்பு!

தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருக்கோயில் கருவறைக்குள் சென்று
இறைவனுக்குப் பூவும் நீரும் இட்டு வழிபாடு செய்யும் உரிமை
சீலமுடைய அனைவருக்கும் உண்டா? இல்லையா?

**உண்டு என்ற தலைப்பில் கட்டுரைகள்**
**வரவேற்கப்படுகின்றன**

—ஆசிரியர்.

உ



# விநாயகர் வழிபாடு

சீனி-விசுவநாதன்

இந்துக்கள் எந்தத் தொழிலைத் தொடங்கினாலும், அது இடையூகளின்றி இனிது முடிதற்பொருட்டு, விக்கினேசுவரரான கணபதியை முதற்கண் வழிபடுவது வழக்கத்தில் இருந்து வருகின்றது. ஏதாவது எழுதத் தொடங்கினாலும் முதலில் பிள்ளையார் சுழி போட்ட பின்னரே எழுதத் தொடங்குவது என்ற பழக்கமும் நடைமுறையில் இருந்து வருகிறது. பாவாணர்களும் தாம் படைக்கும் நூல்களுக்குக் காப்புச் செய்யுளாகப் பிள்ளையார் வணக்கம் யாத்த பின்னர் தான் நூலைத் தொடங்குவது என்பதை மரபாகக் கொண்டுள்ளனர். இதனை மகாகவி பாரதியார் மிக அழகாக, "பாவாணர் சாற்று பொருள் யாதெனினும் சித்தி பெறச் செய்வாக்கு வல்லமைக்கா—நின்றனுக்குக் காப்புரைப்பார்'' என்று தம்முடைய 'விநாயகர் நான்மணிமாலை'யில் குறிப்பிடுகிறார். இப்படியொரு நம்பிக்கை எல்லார் உள்ளத்திலும் வளர்ந்து வேரூன்றியுள்ளது.

ஆதி பரம்பொருளான மேன்மை பொருந்திய விநாயகரது பொற்கழலை நாளும் பணிந்தால் பெறற்கரும் பேறுகளைப் பெறலாம். கணபதியைத் தஞ்சமெனக் கொண்டு, நெஞ்சிலிருத்தி நாளும் அவரது கஞ்ச மலர்த்தாளைப் பணிந்தால் நம்மை அவர் வாழ்விப்பார்; நெஞ்சக் கமலத்து நிறைந்து அருள் புரிவார்; வினையை வேரறுப்பார்.

விநாயகரை வழிபாடு செய்யுமுகத்தான் நம் நாட்டு மக்கள் பற்பல விரதங்களை அனுஷ்டிக்கிறார்கள். அவற்றுள் ஒன்றுதான் சதுர்த்தி விரதமும். விநாயகர் பிறந்து கணபதியாக்கப் பெற்ற சதுர்த்தி நாள்தான் வழிபாட்டிற்குச் சிறந்த நாளாகக் கருதப்படுகின்றது.

"பந்தமறும் ஆவணித் திங்களின் வளரும்
சதுர்த்தி யெனப் பகர்வர் அற்றால்
அந்தமதிச் சதுர்த்தியிற் பூசிப்பவருக்
குறுபயனுர் அளக்க வல்லார்"

என்று விநாயக புராணம் சதுர்த்தி விரதத்தைச் சிறப்பிக்கிறது.

பிள்ளையாரைச் சிறப்புடன் பூசனை செய்ய ஏற்றுக் கொண்ட விரதத்திற்குத்தான் விநாயக விரதம் அல்லது சதுர்த்தி விரதம் என்று பெயர் வழங்கி வருகிறது. விரதம் என்ற சொல்லுக்கு நியமத்துடன் சங்கல்பம் செய்துகொண்டு அனுஷ்டிக்கும் கருமம் என்பது பொருள். இச் சதுர்த்தி விரதம் சிறப்புடையது; மேலானது; முதன்மையானது; சக்தி வாய்ந்ததுங்கூட. இவ்விரதத்தை அனுஷ்டிப்பவர்கள் எல்லாமும் பெற்று மேன்மை பெற வாழ்வர் என்பது ஐதீகம்.

விநாயக சதுர்த்தி, ஆவணி (பாத்ரதபத மாதம்) சுக்கிலபக்ஷ சதுர்த்தியாகும். இந்நாளே கணபதி பிறந்த நாளாகும்.

ஆவணிமாதத்து சுக்லபக்ஷ சதுர்த்தியில் தொடங்கி புரட்டாசி மாதத்துச் சுக்லபக்ஷ சதுர்த்தி வரையில் விநாயகர் சதுர்த்தி விரதத்தை அனுஷ்டிக்க வேண்டும். நாள் தோறும் அதிகாலையில் எழுந்து நீராடி, புற்று மண்ணால் விநாயகர் செய்து, பல்வகை மலர்களாலும் பத்திரங்களாலும் பூசித்து வரவேண்டும். இவ்வாறு பூசனை செய்துவரும் முப்பது நாட்களிலும் அன்ன ஆகாரங்களைக் குறைத்துக் கொண்டு, புலன்களை அடக்கி, பக்தி நெறியில் மனத்தை ஈடுபடுத்த வேண்டும். ஒருமாதம் முடிந்ததும் விரதத்தை முடித்துக்கொண்டு மண்ணால் செய்யப்பட்ட விநாயகர் உருவத்தைக் கிணற்றிலோ ஆற்றிலோ அல்லது கடலிலோ சேர்த்து விடுதல் வழக்கம். இப்படிச் செய்வதன் கருத்து, சர்வ வியாபகமான கணபதியின் சக்தியைஅதன் மூலம் எங்கும் பரவச் செய்தல் என்பதேயாகும்.

இவ்வாறு நோன்பு நோற்கும் முப்பது நாட்களும் கடுமையான விரதத்தை அனுஷ்டிக்க முடியாதவர்கள் பூசை ஆரம்பித்த நாளிலாவது உண்ணா விரதமிருந்து மற்றைய நாட்களில் பால், பழம் உண்டு நோன்பை நோற்கலாம். இவ்விரதத்தை அனுஷ்டித்த எண்ணற்றோர் பெறற்கரும் பேறு பெற்றார்கள் என்று புராணங்கள் கூறுகின்றன. நாமும் நம்மால் இயன்ற அளவு நோன்பு நோற்று கணபதியின் கருணைக்கு ஆளாகி, அருளைப் பெறுவோமாக!




## இளையான்குடிப் பதி மாறனார்

இளையான்குடி என்ற ஊரில் மாறன் என்ற வேளாளர் ஒருவர் இருந்தார். ஏர்வளத்தால் நிறைந்த செல்வமும், அடியார்களிடம் இனிய அன்புகாட்டும் நிறைந்த சிந்தையும் ஆகிய இரு செல்வங்களும் அவரிடம் பொருந்தியிருந்தன. அடியவர்களை இனிய மதுரமொழி பேசி வரவேற்பார். மனைக்குள் அழைத்துச் சென்று, ஆசனத்தமரச்செய்து, வணங்கி வழிபட்டுப் பின்னர் அறுசுவை அமுது படைப்பார். இவருடைய செல்வம் மேன்மேலும் வளர்ந்தது. "வித்து மிடல் வேண்டும் கொல்லோ விருந்தோம்பி மிச்சில் மிசைவான் புலம்" என்ற திருக்குறளுக்கு எடுத்துக்காட்டாக விளங்கினார். செல்வம் குறைந்த காலத்திலும் இவருடைய வள்ளன்மை குறையாது என்பதை உலகுக்குக் காட்டவேண்டு மென்று திருவுளம் பற்றினார் சிவபெருமான். அவருடைய செல்வம் குறைந்து வருவதாயிற்று. வளஞ்சுருங்கியும் அவர் மனம் சுருங்கினாரில்லை. மனையிலுள்ள அனைத்தையும் விற்று அடியவர்க்கமுதளிக்கும் தொண்டைச் செய்து வருவாராயினார்.

ஒருநாள் இரவு. நல்ல மழை. இறைவன் ஒரு அடியார் வேடத்தில் மாறனார் மனைக்கு வந்தார். வந்த அடியார் ஈரஆடையை அகற்றி, அவர் பசித்திருப்பதை யறிந்து உணவளிக்க எண்ணினார் மாறனார். வீட்டில் ஒன்றுமில்லை. மனைவி சொன்னபடி அன்று பகலில் அவர் விதைத்த நெல்லை எடுத்துவரப் புறப்பட்டார். கருமை மேகம் உருகி விழுவது போன்று மழை கொட்டிற்று. காலினால் தடவிச் சென்று வயலில் முளைகளைச் சேர்த்து ஒரு கூடையில் கொண்டு வந்தார். வாயிலில் காத்திருந்த அவர் மனைவியார் விதைநெல்லை வாங்கிச் சென்று கழுவி, உலையில் பெய்தார். அடுப்பிற்கு விறகில்லை. மாறனார் வீட்டின் கூறையிலுள்ள அலக்கைப் பிரித்துக் கொடுத்தார். அடுப்பு மூட்டி சோறு சமைத்தாயிற்று. கறிக்கென் செய்வது என்று கலங்கினார், அந்த அம்மையார். கொல்லைப்புறத்தில் நட்டிருந்த புஞ்சைப் பயிரைப் பறித்து வந்து கொடுத்தார் இளசை மாறர். அதைப் பக்குவப்படுத்திப் பல விதமான கறிகள் சமைத்தார். சமைத்த பின் கணவனுக்குக் காட்டினார். அடியவரை அமுதுண்ண அழைத்தார்கள். அவரை அணுகி "அமுது செய்ய எழுந்தருள்க" என்று சொன்ன அளவில் அடியவர் ஒரு சோதியாக விளங்கி மறைந்தார். திகைத்து நின்றனர் இளையான்குடி மாறனாரும் அவர் மனைவியாரும். வானவீதியில் ஒரு காட்சியைக் கண்டனர். சிவபெருமான் உமாதேவியாருடன் இடப வாகனத்தில் தோன்றி, "அன்பனே! அன்பர் பூசையளித்த நீ மனைவியோடும், என் பெருந் தலத்துக் கெய்தி இன்பமார்ந்திருக்க" என்று திருவாய் மலர்ந்தருளினார். மாறனாரும் மனைவியாரும் சிவனடிக்கீழ்ப் பேரின்பப் பெருவாழ்வைப் பெற்றனர்.



ஆராய்ச்சி: சேக்கிழார்பெருமான் இளையான் குடி என்ற ஊர் எந்த நாட்டில் உள்ளது என்று கூறவில்லை. தஞ்சை மாவட்டத்தில் திரு நள்ளாற்றுக்கு மேற்கே இரண்டு கல் தொலைவிலுள்ள ஊர். சிவன்கோயிலுக்கு அருகில் முனைவாரிக்குட்டை, முனைவாரி நாற்றங்கால் என்ற வயல் இருக்கிறது. சோழ மண்டல சதகமும் இதைப்பற்றிக் கூறுகிறது. எனவே இதுதான் மாறநாயனர் ஊர் என்பர் சிலர். வேறுசிலர் இராமநாதபுரம் மாவட்டத்தில் பரமக்குடிக்கு ஏழு கல் தொலைவிலுள்ள இளையான்குடி என்பர். மாறன் என்பது பாண்டியநாட்டுப் பெயர். அந்த ஊரிலும் அமுதளித்தசெய் என்ற வயல் இருக்கிறது. மாறநாயனர் தெரு என்ற தெரு இருக்கிறது. அவர் இருந்த வீட்டின் இடமும் இருக்கிறது. கோயிலில் அமுதளித்த விழா நடக்கிறது. புராணத்தில் கூறியதற்கிணங்க இறைவனுக்கு சோதிபுரீசர் என்ற பெயர் வழங்குகிறது. இந்த காரணங்களால் பாண்டியநாட்டு இளையான்குடி தான் என்றும் கூறுகின்றனர். வைணவ ஆசாரியரான மாறன் என்பவரும் பாண்டிய நாட்டைச் சேர்ந்தவர் என்பதும் ஈண்டு கருதற்பாலது.

இந்த வரலாற்றில் மாறனர் மனைவியார் அமைச்சர்போலத் தக்க சமயத்தில் யோசனை கூறியது, ஒரு கீரைச்செடியைக் கொண்டே பலவகைக் கறிகளாக்கியது, உணவு படைக்கும் முன் செய்தவற்றைக் கணவனருக்குக் காட்டியது போன்றவை நாம் அறிந்து மகிழத் தக்கன. மாறனர் வரலாறு "இடனில் பருவத்தும் ஒப்புரவிற் கொல்கார் கடனறி காட்சியவர்" என்ற திருவள்ளுவர் வாக்குக்கு எடுத்துக்காட்டாக விளங்கி நிற்கிறது.

இந்த நாயனர் திருநட்சத்திரமான மகம் ஆவணிமாதம் 20-ஆம் தேதி (5-9-75) வருகிறது. அந்த நாளை நாம் அனைவரும் கொண்டாடுவோமாக.

"இளையான் தன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்"—சுந்தரர்.

---

## விலங்கு தறித்த விநாயகர்

குபேர சம்பத்தையுடைய திருவெண்காடர் என்ற பட்டினத்தாரிடம் சேந்தனர் என்பவர் கணக்கராக இருந்தார். திருவிசைப்பா பாடியவர் இந்த சேந்தனர் என்றும் கூறுவர். பட்டினத்தார் துறவு பூண்ட பின்னர் சேந்தனரை அரசன் சிறையிலிட்டான். சேந்தனர் மனைவி இதைப் பட்டினத்தடிகளிடம் கூறி முறையிட்டாள். உடனே கீழ்க்கண்ட பாடலை அடிகளார் பாடினர்:-

"மத்தளை தயிருண்டானும்
மலர்மிசை மன்னினனும்
நித்தலும் தேடிக்காண
நிமலனே நீ இன்றேகிச்
செய்த்தலை கயல்பாய் நாங்கூர்ச்
சேந்தனை வேந்தனிட்ட
கைத்தளை நீக்கி என்முன்
காட்டுவெண் காட்டுளானே"

இந்தப் பாட்டைச் செவி மடுத்தருளிய சிவபெருமான் விநாயகருக்கு ஆணையிட அவரும் சென்று சேந்தனர் கையிற் பூட்டியிருந்த விலங்கைத் தகர்த்து, அவரைச் சிறையினின்றும் மீட்டார். எனவே அவருக்கு விலங்கு தறித்த விநாயகர் என்ற பெயர் ஏற்பட்டது. அந்தக் கோயில் திருவெண்காடு என்னும் தலத்தில் இருப்பதை இன்றும் காணலாம்.

விநாயகர் திருவிளையாடல் இது ஒன்று மட்டுமா! இன்னும் எத்தனையோ!

—க. கலியாணம், எம். ஏ.

9-9-75 விநாயகர் சதுர்த்தியை ஒட்டி வெளியிடப்பெறுகிறது.



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# நம்பியாண்டார் நம்பி-கலித்துறைத் திருவந்தாதி

(குன்றக்குடி ஸ்ரீ ஆறுமுகத்தம்பிரான் பதவுரையுடன்)

பிரதி செய்தவர் : சேக்கிழார்தாசன்

### பொய்யடிமை யில்லாத புலவர்

தரணியிற் பொய்மை யிலாத் தமிழ்ச்
சங்க மதிற்கபிலர்
பரணர் நக்கீரர் முதனாற்பத்
தொன்பது பல்புலவோ
ரருமணமக் கீயுந் திருவால
வாயரன் சேவடிக்கே
பொருளமைத் தின்பக் கவிபல
பாடும் புலவர்களே. (49)

(இ-ள்): திருவருளை எமக்குத் தரும் திருவால வாயின்கண் வீற்றிருந்தருளும் சிவபிரான் சிவந்த திருவடிக்கே; தாம் கூறும் பொருளை யமைத்த இன்பத்தைத் தரும் பல பிரபந்தங் களைப் பாடுகின்ற கவிஞர்களே; நிலவுலகின்-கண் பாண்டியனது தமிழ்ச் சங்கத்தில் கபிலரும் பரணரும் நக்கீரரும் முதலாக; பொய்மை யில்லாத நாற்பத்தொன்பது புலவர்களென்று சொல்லப்படுவோர். (எ-று).

### புகழ்ச் சோழ நாயனுர்

புலமன் னியமன்னைச் சிங்கள
நாடு பொடிபடுத்த
குலமன் னியபுகழ்க் கோகன
நாதன் குலமுதலோ
னலமன் னியபுகழ்ச் சோழன
தென்பர் நகுசுடர்வாள்
வலமன் னியவெறி பத்தனுக்
கீந்ததொர் வண்புகழே. (50)

(இ-ள்): விளக்கமான ஒளியையுடைய உடை வாளை வெற்றி மிக்க எறிபத்த நாயனுர் கையில் என்னையுங் கொல்லுமென்று கொடுத்த ஒரு வண்மையான கீர்த்தியை; அயற்புலத்துள்ள அரசர்களையும்; சிங்கள நாட்டரசனையும் அழித்த; குலத்தில் நிலை பெற்ற புகழையுடைய கோகனநாதன் என்னும் சோழனது வமிசத்தில் அவதரித்த முதல்வராகிய நன்மைமிக்க புகழ்ச் சோழ நாயனரதென்று அறிஞர் கூறுவர். (எ-று) ஏ அசை

### நரசிங்க முனையரைய நாயனுர்

புகழும் படியெம் பரமே
தவர்க்குநற் பொன்னிடுவோ
னிகழும் படியோர் தவன்மட
வார்புனை கோலமெங்கு
நிகழும் படிகண் டவற்கன்
றிரட்டி பொன் னிட்டவனி
திகழு முடிநர சிங்க
முனையர சன்றிறமே. (51)

(இ-ள்): சிவனடியார்களுக்கு நல்ல பொன் கொடுக்கின்ற பொழுது; யாவரும் இகழ்ச்சி செய்யும்படி ஒரு தவவேடமுடையானிடத்து மகளிர்களால் செய்யப்பட்ட நகக்குறி முதலிய கோலமானது; உடம்பு முழுதும் இருப்பதைக் கண்டு அத்தினத்தில் அவனுக்கு; இருமடங்கு பொன் கொடுத்து நிலவுலகத்தின்கண் கீர்த்தி விளங்கும் முடி சூடிய நரசிங்க முனையரென்னும் அரசனது நிலைமையை; எடுத்துச் சொல்லும் முறைமை எம் வம்சத்ததா அன்று. (எ-று).

### அதிபத்த நாயனுர்

திறமமர் மீன்படுக் கும்பொழு
தாங்கொரு மீன் சிவற்கென்
றுறவமர் மாகடற் கேவிடு
வோனெரு நாட்கனக
நிறமமர் மீன்பட நின்மலற்
கென்றுவிட் டோன்கமலம்
புறமமர் நாகை யதிபத்த
னுகிய பொய்யிலியே. (52)

(இ-ள்): தம் சாதிக்கு அமைந்த வலை படுக்கு மிடத்து; அவ்விடத்து ஒரு மீனைச் சிவபிரானுக் கென்று பொருந்த; அம்மீனிருக்குங் கடலிலேயே நாள்தோறும் விடுகின்றவரும்; ஒரு தினத்தில் பொன் மயமான மீனனது தன் வலையில் அகப்பட; அதையும் சிவபிரானுக்கென்று விட்டவரும் யாரெனில்; நகர்ப் புறம்பே தாமரை மலர்கள்

விளங்கியிருக்கும் திருநாகையில் அவதரித்த; அதிபத்த நாயனுரென்னும் திருப் பெயருடைய மெய்யர். (எ-று). ஏ-அசை.

கலிக்கம்ப நாயனுர்

பொய்யைக் கடிந்து நம் புண்ணியர்க்
காட் பட்டுத் தன்னடியான்
சைவத் திருவுரு வாய்வரத்
தானவன் ருள்கழுவ
வையத் தவர் முன்பு வெள்கி நீர்
வாரா விடமனைவி
கையைத் தடிந்தவன் பெண்ணு
கடத்துக் கலிக்கம்பனே. (53)

(இ-ள்): தனக்கு அடியராயிருந்த ஒருவர்; உலக வாழ்க்கையைத் துறந்து நமது முதல்வருக்கு அடிமைப்பட்டு; சைவ வேடங்கொண்டு தன் மனைக்கு அடியார்களோடு எழுந்தருள தான் அவ்வடியாருடைய பாதங்களை விளக்க; மனையாள் உலகத்தாருக்கு நாணமடைந்து கரகநீர் விடாதொழிய; அம்மனையாளது கையை வெட்டினவர் யாரெனில்; திருப் பெண்ணுகடத்தில் அவதரித்த கலிக்கம்ப நாயனுர். (எ-று) ஏ-அசை.

கலிய நாயனுர்

கம்பக் கரிக்குஞ் சிலந்திக்கு
நல்கிய கண்ணுதலோ
னும்பர்க்கு நாதற் கொளி விளக்
கேற்றற் குடலிலனுய்க்
கும்பத் தயிலம்விற் றுஞ்செக்
குழன்றுங்கொள் கூலியினு
லெம்பற் கெரித்த கலியொற்றி
மா நகர்ச் சக்கிரியே. (54)

(இ-ள்): கட்டுத்தறியை முனியும் யானைக்கும் சிலந்திப் பூச்சிக்கும் அருள்புரிந்த நெற்றிக் கண்ணையுடையயோராகிய; சிவபிரானுக்கு விளக்கமான திருவிளக்கை ஆலயத்தில் இடுவதற்கு; பொருளில்லாதவராய்க் குடத் தில் எண்ணெய் விற்றும்; செக்கோட்டியும் தான் பெற்ற கூலியினுல்; அப்பிரானுக்குத் திரு விளக்கெரித்தவர் யாரெனில் கலிய நாயனுர் என்னும் திருவொற்றியூரில் அவதரித்த செக்கார் குலத்தினர். (எ-று). ஏ-அசை. ஈண்டு உடலென்றது பொருளை.

சத்தி நாயனுர்

கிரிவில் லவர்தம் மடியரைத்
தன் முன்பு கீழ்மை சொன்ன
திருவில் லவரையந் நாவரி
வோன்றிருந் தாரை வெல்லும்
வரிவில் லவன்வயற் செங்கழு
நீரின் மருவு தென்ற
றெருவில் விரைகம ழுந்தென்
வரிஞ்சைத் திகழ்சத்தியே. (55)

(இ-ள்): மேருவில்லையுடைய சிவபிரான் திருவடியாரை; தம் முன்பு குற்றங் கூறிய கேடுடையாரது; அந்நாவை யரிகின்றவரும்; பகைவரை வெற்றி கொள்ளும் வரிந்து கட்டிய வில்லையுடையவரும் யாரெனில்; வயலினிடத்துள்ள செங்கழுநீர் மலரிற் றங்கி வருகின்ற சிறு தென்றலானது; வீதியில் மணங்கமழ்கின்ற தெற்கின்கணுள்ள வரிஞ்சை நகரத்தில் வாழ்ந்த சத்திநாயனுர். (எ-று)
ஏ-அசை. ஐயுரு பிரித்துக் கூட்டப்பட்டது.

ஐயடிகள் காடவர்கோன் நாயனுர்

சத்தித் தடக்கைக் குமரனற்
ருதைதன் ருனமெல்லா
முத்திப் பதமொரோர் வெண்பா
மொழிந்து முடியரசா
மத்திற்கு மும்மைநன் ருலரற்
காவைய மேற்றலென்னும்
பத்திக் கடலை யடிகளா
கின்ற நம் பல்லவனே. (56)

(இ-ள்): வேற்படை யேந்திய நீண்ட திருக் கரத்தையுடைய முருகக் கடவுளின் தாதை யாகிய சிவபிரான் வீற்றிருந்தருளுந் தலங்கள் தோறும்; வீட்டு நெறிப் பொருளையுடைய ஒரோர் வெண்பாவை அருளிச் செய்து; முற்றத் துறந்து சிவபிரான் திருப்பணிக்கு ஐயமேற்றல்; முடிகவித்த அரசராதலினும் மும்மடங்கதிகம் என்றருளிச் செய்யும்; பத்திக்கு ஓர் கடல் போன்றவர் யாரெனில்; ஐயடிகள் காடவர் கோன் நாயனுர் என்னும் நமது பல்லவச் சோழர். (எ-று). ஏ-அசை. பதம் என்றது ஈண்டுப் பொருளை.

(தொடரும்)




24-7-75 "குமுத"த்தில் "கேள்விகள்" தலைப்பில் தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்களைப் பற்றி 'அரசு' தந்துள்ள பதில் அவருடைய ஒருவழிப்பட்ட சிந்தனையைக் காட்டுவதாக இருக்கிறது.

"இளம் குன்றக்குடி அடிகளார் நாத்திக வாதத்தை விவாதித்துப் புகழைத் தேடிக் கொண்டார்" என்று இறந்த காலத்தால் குறிப்பிட்டிருக்கிறார். இன்று அடிகளார் என்ன பேசுகிறார் என்பதை அவர் அறியாதது ஏன்? அவர் கேளாதது ஏன்? என்று கேட்கத் தோன்றுகிறது. அண்மையில்கூட "கண்களால் கடவுளைத் தேடுபவர் விலங்குகள்-காட்டுமிராண்டிகள்" என்று மிகவும் கடுமையான வார்த்தைகளால் அடிகளார் விமர்சனம் செய்தார்.

நடுவயதில் 'அரசு' குறித்ததைப் போல் பெரியாரை அழைத்து வருவதாகச் சூளுரைத்தது உண்மை. அந்த அரிய சாதனையைச் செய்ய இயலாமற் போனதற்கு, நமது சமய நெறிகளில் ஏற்பட்ட முறைப் பிறழ்வுகளே காரணம் என்பது அடிகளார் கருத்து. இதனை 1972-இல் வடலூரில் தைப்பூசத் திருவிழாவின் பொழுது "தமிழகச் சமய நிறுவனங்கள் பிறப்பினால் வேற்றுமை கொண்டாடும் தீண்டாமை, சாதி வேற்றுமை ஆகியவைகளை ஒழிக்க முன் வந்து சம்மதம் தந்தால் பெரியாரை எப்படி? எந்த வகையில்? திருக்கோயிலுக்கு அழைத்து வர வேண்டுமோ அப்படி அந்த வகையில் அழைத்து வருகின்றேன். அங்ஙனம் அழைத்து வரத் தவறிவிட்டால் வடலூர் வள்ளற் பெருமான் சந்நிதியில் திறந்த வெளியில், நண்பகல் கோடை வெய்யிலில், சுடுமணலில் நிறுத்தி வைத்துச் சவுக்காலடித்துச் சாகடிக்கலாம்" என்று சூளுரைத்தார்கள். சமய உலகத்தில் இது நிகழவில்லை. பெரியாரும் அதற்குள் இயற்கை எய்தி விட்டார்.

இன்றைய அடிகளார் இளமை அடிகளாரைப் போலவேதான் எழுதுகிறார்; பேசுகிறார்; நடுவயது அடிகளாரைப் போலத்தான் இன்றும் சூளுரைத்துச் செயற்படுகின்றார். அடிகளார் நிலையில் என்றும் மாறுதல் இல்லை! "குமுதம்" பார்வையில் வேறுபாடு இருக்கிறது. ஏன்? வளர்ந்து வந்துள்ள துவேஷமே காரணம்! இனியாவது "குமுதம்" கற்பனையான துவேஷங்களை விட்டு அடிகளார் பணிக்கு ஆக்கம்தர முன் வரவேண்டும்.

—பெ. சுப்பிரமணியம் எம்.ஏ.,

**தொடர்ந்து வெளியிடுக...**

தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் கட்டுரையில்லாதது ஏமாற்றமாக இருந்தது.

தி. கு. நவனீதம், திருச்சி-2.

**கவிக்குரல்...**

நல்ல கவிதைகளை வெளியிடலாமே!

கு. சீனிவாசன், திருவண்ணாமலை.

**நல்ல தாள்...**

நல்லதாளில் அச்சிட்டால் அதிக நாள் வைத்துக் கொள்ளவும், நூல் நிலையங்களில் வைக்கவும் உதவும்.

வி. தாமஸ், மதுரை-8.

**வழிபாட்டிற்கு உதவுமே...**

அட்டைப்படத்தில் இறைவனின் திருவுருவங்களை ஆப்செட் வண்ணப் படமாக வெளியிட்டால் வழிபடுவோருக்கு உதவியாக இருக்கும்.

அருளோசை வாசக அன்பர்களைத் தங்கள் ஊரில் உள்ள சமயத் தொடர்பான சிறப்புச் செய்திகளை எழுதியனுப்பும்படி தூண்டலாம்.

இறையடியார்களின் படக் கதைகளை வெளியிடலாம். தத்துவ விளக்கங்கள் ஒவ்வொரு இதழிலும் தவறாது இடம் பெற வேண்டும்.

விரதங்களின் விளக்கங்களை வெளியிடலாம்.

சந்தா எண் 3778

**சூடும் சுவையும்...**

கருத்துக்கினிய கட்டுரைகளை எழிலோடு தாங்கி வந்தது, நான்காம் ஆண்டு புதிய இதழ். தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் 'திருக்குறள் தேசிய நூல்' என்ற கட்டுரையை அடுத்த இதழில் எதிர்பார்க்கலாம் அல்லவா?

பட்டிமன்றப் பகுதி-சூடும் சுவையும் உள்ளதாக அமைந்துள்ளது. கல்லூரி மாணவர்களுக்குப் பயன்படும் வகையில் மற்றும் பல புதிய பகுதிகளைச் சேர்க்கும்படி கேட்டுக் கொள்கிறேன். சிறு கதைகளையும் தொடர் கதைகளையும் வெளியிடலாமே! செய்தி இதழ்களில் அடிகளாரின் மேடைப் பேச்சு சுருக்கியும், திருத்தியும் வெளிவருவதைப் பார்க்கிறேன். அவருடைய முழுப் பேச்சையும், உங்கள் பத்திரிக்கையில் வெளியிட்டு 'வெளி உலகு'க்கு உண்மையைப் புலப்படுத்தினால் நல்லது. உங்கள் பணி சிறக்க-வெல்க!

ரவிகுமார்
கந்தசாமி ஆண்கள் கல்லூரி, சென்னை-40.

**அருமை! அருமை!...**

சென்ற இதழ் அட்டைப்படம் அழகாக இருந்தது. மூவண்ணத்தில் வெளியிடலாமே!

செ. செல்லையா, சென்னை-4

# சமயபோதனை

பாடம் 17 | விஞக்கள் | ஆகஸ்டு 1975

மதிப்பெண் சமம்] [மதிப்பெண் 100

விஞக்கள் இந்த இதழ்க் கட்டுரைகள் பற்றியனவே ஆகும். விடைகளை முழு அளவு Foolscape size) இரண்டு தனித் தாள்களில் நான்கு பக்கத்திற்குள் எழுதி இச்செயலகத்திற்கு, 5-9-1975க்குள் கிடைக்கும்படி அனுப்பி வைக்க வேண்டும். சந்தா எண், பெயர், வயது, முகவரி இவற்றைத் தெளிவாக எழுதி அனுப்பவேண்டும்.

1. முக்குணங்களைப் பற்றிச் சமயத் துறையில் உள்ள வேற்றுமைகளைப் பற்றிச் சுருக்கி எழுதுக.
2. அகீந்திரபுரம் கோயில் தல வரலாறு, இறைவன் சிறப்பு பற்றி எழுதுக.
3. விஷ்ணு தம் நெஞ்சத்து வைத்துப் பூசித்தவர் யார்? அவருக்குள்ள வேறுபெயர்கள் யாவை?
4. பட்டினத்து அடிகளின் உபதேசம் யாது? 'மானிட சாதியர் பருகும் நீரும் உருக்கும் உடையும் பாவம் செய்தன' என்பதன் உட்கருத்து யாது?
5. ஒருலகம் காணவும்-ஒருமைப்பாட்டுணர்வு நிலவவும் அடிகளார் அறிவுறுத்தும் கருத்துக்கள் யாவை?
6. ஆழ்வார் மனித இனத்திற்குச் செய்யும் உபதேசம் யாது?
7. 'ஞாஞவரண மாபாடியத்துள் எழுதிய விளக்கம் உணர்வு மிக்கார்க்கும் உவகை மிகுவிக்கும்'— இதனை விளக்குக.
8. பாவேந்தனின் கனவுகள் யாவை? அவை நனவாக நாம் மேற்கொள்ள வேண்டுவன யாவை?
9. அகப்பூசனையின் மேம்பாட்டை விவரிக்க.
10. அறிவு எப்போது ஒழுக்கமாக உருப் பெறுகிறது?



## கண்ணு......கண்ணு !

தாமரைவதனம்.

(எடுப்பு)

ஆவணி ரோகிணியில் அவதரித்தவனே!-கண்ணு
ஆதாரம் நீ தானே கோபாலனே ! [ஆவணி

(தொடுப்பு)

மாவடி பால்அன்று மூவடி மண்கேட்டு-இரண்டு
மாணடி யால் இந்த மூவுலகளந்தவனே ! [ஆவணி

(முடிப்பு)

பாவடி யால்உன்னைப் பாடுகின்றோம்—கடைக்கண்
பார்த்தருள் வாய் எங்கள் பரம்பொருளே !—உன்றன்
சேவடி போற்றுகிறோம் ! மாலவனே—எமக்குச்
செம்மை நலம் சேரச் செய்திடுவாய் கண்ணு ! [ஆவணி

30-8-75-ல் ஆவணித் திங்கள் ரோகிணி நட்சத்திரத்தில்-கோகுலாஷ்டமி-ஸ்ரீஜயந்தியை யொட்டி வெளியிடப் பெறுகிறது.

குன்றக்குடி

# அருள்மிகு ஆறுமுகப் பெருமான்

# பாமாலை

மரு. பரமகுரு

உன்னை நினையா உலுத்தநெஞ் சம்கனிந் துள்ளுருகிப்
பன்னிப் புகழாப் பழிவாய் உன் கோயிற் படிக்கு வந்தும்
சென்னியிற் கூப்பாத் திருட்டுக்கை பெற்ற சிறுமையினேன்
என்ன பிறப்பெடுத் தேன் இறை வா ஏன் இருந்தனனே. (61)

கூடிக் களித்தேன் குவிமுலை யாள்பின் கொடியவனேன்
நாடி தளர்ந்தேன் நலமிழந் தேன் பொய் நரர்தமையே
பாடினேன் பாடிப்பின் பல்லிளித் தேன் உன்றன் பாதமலர்
தேடிலேன் என்ன சிறுமை செய் தேன் இன்று தேம்பினனே. (62)

நாவடி கையடி நல்லோர் வயிற்றில் நறுக்கடி செய்
தீவடி வானவ ரைச் சேர்ந்த பாவி செடி மனத்தேன்
மேவிடா துன்னை அவரையே நச்சினேன் வெய்துயிர்த்தேன்
பூவடி வாகிய புண்ணியா என்னைப் பொறுத்தருளே. (63)

குறிக்கோ ளிலேன் வால் குழைத்துத் திரிந்து கொடுப்பவனை
மறித்தோடி நக்கு நாய் போல்வேன் மமதை வலியரக்கர்
தெறித்தோட வேல் விட்ட தேவா உமையாள் திருக்குமரா
வெறிச்சோடிப் போனதப் பாவினை யேன் வாழ்க்கை வீணனதே (64)

தருக்கித் திரிந்தேன் தலையால் நடந்தேன் தகாத செயல்
பெருக்கிக் களித்தேன் எனக்கே முயன்றேன் பிறர் நலத்தைச்
சுருக்கினேன் பாவம் சுமந்தேன் திரிபுரம் சுட்டெரித்துக்
கருக்கிய நெற்றிக்கண் ணன்கும ராளனைக் காத்தருளே. (65)

நேற்றிருந் தாரின் றிலரே யெனுமாண்ட நீணிலத்தில்
நோற்றிருந் தார் ஞான நுண்ணறி வார் ஒரு நோக்கமில்லேன்
சோற்றுப் படுக்கையி லேசுகம் கண்டேன் துயருழந்தேன்
கூற்றுக் கிருந்தேனே குன்றக் குடிமலைக் கொற்றவனே. (66)

வனத்தில் திரிமிரு கம்போல் வேன் வாழும் வகையறியேன்
எனது யான் என்னும் செருக்குற் றலைந்தேன் இழிநெறியில்
மனத்தைப் பறிகொடுத் தேன்முரு காவுன் வழியடியார்
இனத்தின் நடுப்புக எப்படிக் கூடும் எழிலரசே. (67)

செய்த பிழைகள் கணக்கில் தீமைச் சிறு செயல் நூல்
நெய்தவ் வினைவலை கொண்டதில் சிக்கி நிலைகுலைந்தேன்
உய்தி யொன் றுண்டோ ஒளிசேர்குன் றக்குடி யுள்மணியே
துய்யவே லால்வினை கொய்தறுத் தாள்க சுரர்பதியே. (68)